

# பொருளடக்கம்

மலர் 11 }
இதழ் 49 }

1952 ஜூலை 6

{ நந்தன ஆனி 23



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 48

# ரொம்ப சந்தோஷம்!

முடிவு எப்படியானாலும், நமக்கு ரொம்ப சந்தோஷம்! எதைப் பற்றிச் சொல்கிறோம் என்று தெரிகிறதல்லவா? சென்னைச் சட்டசபையில் இந்த வாரத்தில் நடக்கும் முக்கியமான விவாதத்தைப் பற்றித்தான். "ராஜாஜி சபையின் மீது சட்டசபைக்கு, அதாவது சட்டசபையில் பெரும்பான்மையோருக்கு நம்பிக்கை உண்டா? இல்லையா?" என்பது விவாதத்திலுள்ள பிரச்னை. நாம் இதை எழுதும் போது விவாதம் தொடங்கி நடக்கிறது. இந்தப் பத்திரிகை இதழ் வெளியாகும் போது, நேயர்களுக்கு முடிவு தெரிந்து போயிருக்கும். முடிவு எப்படி ஆனாலும், நமக்குச் சந்தோஷந்தான்!

"ராஜாஜி மீது நம்பிக்கையில்லை" என்ற அதிபுத்திசாலித் தனமான முடிவைச் சென்னைச் சட்டசபை செய்து விட்டால், ராஜாஜியின் சொந்த தேக சுகத்தையும் மன நிம்மதியையும் கருதி நாம் ரொம்ப சந்தோஷப்படுவோம்.

"நம்பிக்கை இருக்கிறது" என்று வெறும் புத்திசாலித்தனமான முடிவைச் சென்னைச் சட்டசபை செய்திருந்தால், சென்னை மாகாண மக்களின் நல்ல அதிர்ஷ்டத்தை எண்ணி நாம் மிக்க மகிழ்ச்சி அடைவோம்.

* * *

முன்னொரு தடவை "மந்திரி சபை நீடிக்குமா!" என்ற தலைப்புடன் நாம் எழுதியிருந்த போது, நேயர்களில் சிலர் தங்கள் மன வருத்தத்தைத் தெரிவித்திருந்தார்கள். அந்தத் தலைப்பே அவர்களுக்குப் பிடிக்கவில்லை! அத்தகையவர்களுக்குச் சென்ற வாரத்தில் உண்மையாகவே பிரம்மாண்ட ரூபத்துடன் எழுந்து விட்ட மேற்படி பிரச்னை அதிக மன வருத்தத்தை அளித்திருக்கும்.

ராஜாஜி மந்திரிசபை ஏற்பட்டது இம் மாகாணத்தின் பேரதிருஷ்டம் என்று கருதுகிறவர்கள் அந்த அதிர்ஷ்டம் நீடித்திருக்க வேண்டும் என்று ஆசைப்படுவது இயல்புதான். ஆனால் ஆசைப்படுவதெல்லாம் எப்போதும் நடந்து விடுவதில்லை. மிகமிக நல்ல ஆசையாக இருந்தாலும், காரண காரியங்களையும் சூழ்நிலைகளையும் பொறுத்தே நிறைவேறக் கூடும்.

தற்போதுள்ள சென்னைச் சட்டசபையின் அமைப்பையும், வெளியில் உள்ள சூழ்நிலையையும் உத்தேசிக்கும் போது, இம்மாகாணத்தின் நல்லதிர்ஷ்டம் எவ்வளவு காலம் நீடித்திருக்கும் என்று யாராலும் நிச்சயம் சொல்ல முடியாது.

ஆகையால், "மந்திரி சபை நீடிக்குமா?" என்னும் பிரச்னை அடிக்கடி எழுந்து கொண்டு தானிருக்கும்.

மேற்படி பிரச்னை அதுவாக எழாவிட்டால், ராஜாஜியாவது அதைக் கிளப்பி விட்டுக் கொண்டுதானிருப்பார்! அதைப் பற்றி அவர்மீது நாம் குறை கூறுவதற்கில்லை.

தள்ளாத வயதில் முன்னிலும் மேல் நடப்பதைக் காட்டிலும் கடினமான வேலைகளை இரவு பகல் செய்து கொண்டிருப்பவர், அடிக்கடி நிதானித்து, "இப்படி நாம் வேலை செய்வதினால் யாருக்கேனும் ஏதேனும் உபயோகம் உண்டா? அல்லது எல்லாம் விழலுக்கு இறைத்த நீரா?" என்று தெரிந்து கொள்ள விரும்புவது இயல்பே அல்லவா?

* * *

நம்பிக்கைப் பிரச்னையை இப்போது எடுத்ததற்கு ராஜாஜி முக்கியமாக இரண்டு காரணங்களைக் கூறியிருக்கிறார்.

1. இம்முறை கவர்னர் பிரசங்கத்தின் போது ஐக்கிய ஜனநாயக முன்னணிக் கட்சியினர் சட்டசபையில் ஆஜராகாமலிருந்தது.

2. அருப்புக்கோட்டைப் பார்லிமெண்டரி தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகர் தோல்வி அடைந்தது.

முதல் காரணத்தைப் பொறுத்த வரையில், "அவர்கள் கவர்னர் பிரசங்கத்துக்கு வராமலிருந்ததிலிருந்து ஐ. ஜ. மு. கட்சியாருக்கு நான் முதன் மந்திரியாக யிருப்பது பிடிக்கவில்லை என்று ஏற்படுகிறது" என்பதாக ராஜாஜி தெரிவித்திருக்கிறார்.

இதில் சந்தேகம் ஒன்றுமேயில்லை. ஸ்ரீ டி. பிரகாசத்தைத் தலைவராகக் கொண்ட பல பட்டறைக் கட்சியாருக்கு ராஜாஜி முதன் மந்திரியாயிருப்பதும் பிடிக்கவில்லை; இம்மாகாணத்தில் நேர்மையான அரசாங்கம் நடப்பதிலும் விருப்பமில்லை.

அதை ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதத்தில் காட்டிக் கொண்டுதானிருப்பார்கள்.

முதல் தடவை கவர்னர் பிரசங்கத்தின்போது 'வாக் அவுட்' செய்தார்கள். இந்தத் தடவை வராமலே இருந்தார்கள். அடுத்த தடவை என்ன செய்வார்களோ தெரியாது.

எதிர்க்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவர்கள் என்ன வேணுமானாலும் செய்வார்கள்.

ஆனால் சட்டசபையில் அவர்களுக்கு ஆதரவு எப்படியிருக்கிறது, மந்திரி சபைக்கு ஆதரவு எவ்வளவு இருக்கிறது என்பதை முக்கியமான சந்தர்ப்பங்களில் தெரிந்து கொள்ளுவது அவசியம்.

காங்கிரஸுக்குச் சட்ட சபையில் பூரண பெரும்பான்மை பலம் இல்லை. குறைந்த பட்சம், மற்றும் நாற்பது பேரின் ஆதரவு வேண்டும். இந்த ஆதரவு இருக்கிறதா என்பதை எப்படி நிர்ணயிப்பது!

இப்போது கூடியிருக்கும் சட்ட சபையில் மந்திரி சபை தயாரித்திருக்கும் வரவு செலவுத் திட்டத்தின் பேரில் விவாதம் நடக்கப் போகிறது. பல முக்கிய விஷயங்களைப் பற்றி எத்தனையோ வாதப் பிரதி வாதங்கள் நடைபெறும். பட்ஜெட்டின் ஒவ்வொரு இனத்தைப் பற்றியும் பிரேரணைகள், திருத்தப் பிரேரணைகள், ஆட்சேபணைகள், சமாதானங்கள், ஆலோசனைகள், புனராலோசனைகள்,—இவ்வளவும் நடந்தாக வேண்டும். பல நாட்கள், வாரங்கள், மாதங்கள்,—இவ்விதம் கழிந்த பிறகு, மந்திரி சபையின்மீது சட்ட சபைக்கு நம்பிக்கை இல்லை என்று ஏற்பட்டால், முன்னால் நடந்த விவாதங்கள் எல்லாம் வீண் என்றே ஏற்படும் அல்லவா!

அதைக் காட்டிலும் முன்னாடியே தெரிந்து விட்டால், "இந்தாருங்கள்! மூட்டையை நீங்களே தாங்குங்கள்! இல்லாவிட்டால், வோட்டர்களிடம் போவோம், வாருங்கள்!" என்று சொல்லிவிடுவது எவ்வளவோ மேல் அல்லவா!

மண் குதிரைகளை நம்பி ஆற்றில் இறங்கக் கூடாது என்றால் சந்தேகாஸ்பதமான ஆதரவாளரை நம்பிப் பட்ஜெட் விவாதங்களில் பிராணனைக் கொடுப்பதும் அநாவசியந்தானே!

ஆகவே, பட்ஜெட் விவாதத்துக்கு முன்னதாகவே, மந்திரி சபைக்குச் சட்டசபையில் உள்ள ஆதரவு இவ்வளவுதான் என்று தெரிந்து கொள்வது முக்கியமாகிறது.

* * *

ராஜாஜி குறிப்பிட்ட இரண்டாவது காரணம், அருப்புக்கோட்டைப் பார்லிமெண்ட் தொகுதி தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரின் தோல்வி.

"இந்தத் தோல்வியை என்னுடைய மந்திரி சபைக்கு எதிர் வோட்டாக நான் எடுத்துக் கொள்கிறேன்" என்று ராஜாஜி சொல்வதை நாம் ஒப்புக் கொள்ள முடியாது.

சென்ற பொதுத் தேர்தலிலும் இத்தொகுதியில் பார்லிமெண்ட் ஸ்தானம் காங்கிரஸுக்குக் கிடைக்கவில்லை; இந்த உப தேர்தலிலும் காங்கிரஸ் வெற்றி பெறவில்லை.

ஆதலின், லாப நஷ்டம் ஒன்றுமில்லை.

ஒரு தொகுதியின் தேர்தல் முடிவைக் கொண்டு உலகில் எந்த மந்திரி சபையும் மாறியதில்லை.

ராஜாஜி மந்திரி சபையைப் பற்றித் தற்போதைய மாகாண மக்களின் மனோ பாவத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றால், அதற்கு ஒரே வழிதான் உண்டு. மாகாண சட்டசபையைக் கலைத்து விட்டுப் பொதுத் தேர்தல் நடத்துவதுதான்.

அப்படிப்பட்ட பொதுத் தேர்தலிலும் எல்லாத் தொகுதிகளிலும் காங்கிரஸ் வெற்றி பெறுமென்று யாரும் எதிர்பார்க்க முடியாது.

ஆனால், தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் 100க்கு 80 ஸ்தானங்கள் விதம் காங்கிரஸுக்குக் கிட்டும் என்று நாம் உறுதி கூற முடியும்.

அப்படிக் கிடைக்கும் வெற்றிகளில் முதுகுளத்தூர் தொகுதி சேர்ந்திருக்குமா என்பது அப்போதும் சந்தேகந்தான்.

அருப்புக்கோட்டை - முதுகுளத்தூர் தொகுதித் தோல்வியின் காரணங்களையும் படிப்பினைகளையும் பற்றிப் பின்னர் விரிவாக ஆராயலாம்.

இங்கே, அருப்புக்கோட்டைக்கும் சென்னைச் சட்ட சபையில் நம்பிக்கைத் தீர்மானத்துக்கும் என்ன சம்பந்தம் என்பதை மட்டும் கவனிப்போம்.

அந்த சம்பந்தம், ராஜாஜியின் மனோ நிலை சம்பந்தப்பட்டதுதான்.

எப்போது இந்தத் தொல்லை தீரும் என்று காத்துக்கொண் டிருப்பவருக்கு ஏதாவது ஒரு காரணம் அகப்பட்டால் போதுமானதுதானே!

அன்றியும், அருப்புக் கோட்டையில் காங்கிரஸ் அபேட்சகர் ஜயிப்பார் என்று எதிர்பார்த்து ஏமாந்தது போல், சட்டசபையிலும் போதிய பலம் இருப்பதாக எண்ணிக் கொண்டு பல காரியங்களை ஆரம்பித்து விட்டுப் பிற்பாடு ஏமாந்து போவதில் என்ன பயன்? யாருக்குப் பிரீதி!

சட்ட சபையிலும் நம்பிக்கை இல்லை என்று தீர்ந்துவிட்டால், "நம்முடைய கடமையை நாம் செய்தாகி விட்டது" என்ற திருப்தியோடு விலகிக் கொள்ளலாம் அல்லவா!

* * *

ஆரம்பத்தில் நாம் கூறியது போல், முடிவு எப்படியானாலும் நமக்குச் சந்தோஷந்தான்.

ராஜாஜி இன்றைக்கு விலகிக் கொண்டாலும், சென்னை மாகாணத்தில் அவர் இரண்டாவது தடவை முதன் மந்திரி பதவி வகித்தது வீண் போனதாகாது.

இந்தக் குறுகிய காலத்துக்குள் உணவுக் கட்டுப்பாட்டு விலங்குகளைத் தகர்த்தெறிந்து, மக்களுக்குப் புனர் விடுதலை தந்து, இந்தியாவுக்கே வழி காட்டிய சிறப்பை இந்த மாகாணத்துக்கு அவர் தேடித் தந்து விட்டார் அல்லவா!

## உணவு-நிதி மந்திரி சி. சுப்பிரமணியம்

இதற்கு முன்பெல்லாம் மந்திரிகளுக்குள் சர்க்கார் இலாக்காக்களைப் பிரிக்கும்போது உணவு இலாகாவை "எனக்கு வேண்டாம் பூசிணிக்காய்" என்று எல்லாரும் தள்ளிக் கொண்டு வருவார்கள். கடைசியில் மிஞ்சி நின்ற மந்திரியிடம் உணவு இலாகாவை ஒப்புவிப்பது வழக்கம். அவரும் உணவு இலாகா அதிகாரிகள் காட்டிய இடத்தில் கை யெழுத்துப் போட்டு விட்டு நிம்மதியாக இருந்து வருவார். நாட்டில் மிக முக்கியப் பிரச்னையாக இருந்த உணவு இலாகா இக்கதியில் இருந்துவந்தது.

ராஜாஜி மந்திரி சபை ஏற்பட்டதும் உணவு இலாகாவையும் நிதி இலாகாவையும் ராஜாஜி ஸ்ரீ சி. சுப்பிரமணியத்திடம் ஒப்புவித்தார்.

"இவ்வளவு முக்கியமான இரண்டு பெரிய இலாகாக்களை ஒருவரிடமே ஒப்புவிக்கிறீர்களே" என்று பத்திரிகையாளர்கள் கேட்டதற்கு, "அவருடைய தோள்கள் தாங்கக் கூடியவைதான்" என்று ராஜாஜி பதில் அளித்தார்.

அது எவ்வளவு உண்மையான வாக்கு என்பதை ஸ்ரீ சி. சுப்பிரமணியம் நன்கு நிரூபித்து வருகிறார். அவர் உணவு மந்திரி பதவி வகிக்கும் காலத்தில் சென்னை மாகாணத்தில் உணவுக் கண்ட்ரோல் நீக்கப்பட்டு, அது அகில இந்தியாவும் வியக்கும்படியான சரித்திர நிகழ்ச்சியாகி விட்டது. அரசாங்கத்தின் ஒரு தனிப்பட்ட நிர்வாகச் செயலினால் பொதுமக்கள் இவ்வளவு குதூகலம் அடைந்ததை நாம் இதற்குமுன் எங்காவது பார்த்ததும் இல்லை, கேட்டதும் இல்லை.

ஸ்ரீ சி. சுப்பிரமணியம் நிதி மந்திரி என்ற முறையிலும் வெற்றிக் கொடி நாட்டுவார் என்பது அவர் தயாரித்துச் சமர்ப்பித்திருக்கும் முதல் வரவு செலவுத் திட்டத்திலிருந்து வெளியாகி இருக்கிறது.

சென்னை மாகாணத்தின் வரவு செலவு நிலைமை சமீப காலத்தில் பல காரணங்களினால் கவலைக்கு இடமாகி விட்டது. இயற்கையின் விபரீதத்தினால் ராயலசீமையிலும் மற்றும் சில பகுதிகளிலும் பயங்கரமான பஞ்சம் பரவியபடியால் எதிர்பாராத பெருஞ் செலவுகள் ஏற்பட்டன. அரசாங்க நிர்வாகச் செலவும், கல்வி, சுகாதாரம் முதலிய பொதுநலச் செலவுகளும் பெருகிக் கொண்டே இருக்க, வருமான இனங்கள் குறையத் தொடங்கி விட்டன.

இத்தகைய அசௌகரியமான நிலைமையில் நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் இவ்வளவு திருப்திகரமான பட்ஜெட்டைத் தயாரித்ததற்காக அவரைப் பாராட்ட வேண்டும்.

புது வரி என்பது எப்போதும் பொது ஜனங்களுக்குக் கசப்பான விஷயம்தான். ஸ்ரீ சி. சுப்பிரமணியத்தின் பட்ஜெட்டிலும் சில புதிய வரிகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆனால் தற்போதைய நிலைமையில் "இந்த மட்டும் விட்டாரே" என்று நாம் திருப்தி அடைய வேண்டியிருக்கிறது.

அத்துடன், பொது மக்கள் வரி கொடுக்கும்போது இன்னொரு முக்கியமான அம்சத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம்.

அதாவது, கொடுக்கும் வரிப் பணம் சரியான முறையில் பொது நன்மைக்காகவே செலவாகுமா! அல்லது விழலுக்கு இறைத்த நீராகித் தண்டமாய்ப் போய்விடுமா! என்பதுதான்.

ராஜாஜி முதன் மந்திரியாக இருக்கும் வரையில் பொது மக்கள் கொடுக்கும் வரிப் பணத்தில் காலணாக்கூட வீண் செலவாகாது என்று நாம் நிச்சயமாய் நம்பியிருக்கலாம்.

புதிய வரிகளைப்பற்றிச் சட்ட சபையில் விவாதங்கள் நடைபெறும். அபிப்பிராய பேதங்கள் வெளியிடப்படும். முக்கியமாக, பஸ் வரியைப் பற்றிப் பலமான ஆட்சேபணைகள் எழும்பும் என்பது நிச்சயம். ஆட்சேபணைகள் செய்வோர், பஸ் வரிக்குப் பதிலாக வேறு யுக்தமான வரி முறைகளைக் கூறினால், நிதி மந்திரி அவற்றைக் கவனிப்பார் என்று நம்புகிறோம்.

மொத்தத்தில், இம் மாகாணத்தின் தற்போதைய நிலைமையில் இத்தனை திருப்திகரமான பட்

## தாய்ப் பறவையின் கவலை!




"புதிய அபிவிருத்தித் திட்டங்களை நிறுத்திப் பணத்தை மிச்சம் செய்வது உகந்ததல்ல. எல்லாத் திட்டங்களையும் பராமரித்து எதிர்கால சுபிட்சத்துக்கு வழி செய்ய வேண்டும்."—நிதி மந்திரி.

ஜெட்டைத் தயாரித்திருப்பதற்காக நிதி மந்திரியை நாம் வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

நிகழும் வருஷத்தில் துங்கபத்திரா பவானி முதலிய பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் பூர்த்தியாகி விடும் என்னும் சந்தோஷமான செய்தியை நிதி மந்திரி அறிவித்திருக்கிறார். ஆகவே இந்த ஒரு வருஷத்தைப் பொது மக்கள் பல்லைக் கடித்துக் கொண்டு தள்ளிவிட்டார்களானால் இம் மாகாணத்திற்கு வருகிற ஆண்டிலேயே சுபிட்ச யுகம் ஆரம்பமாகிவிடும் என்று எதிர்பார்க்கலாம்.

# ஓர் ஆட்சேபம்!

நிதி மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் வரவு செலவுத் திட்டம் சம்பந்தமாக ரேடியோவில் ஒரு பிரசங்கம் செய்தார். அதில் அவர் குறிப்பிட்ட ஒரு விஷயத்தை நாம் ஆட்சேபிக்க வேண்டியிருக்கிறது.

" 'பாபுலாரிட்டி'யை முன்விட்டு வரி விதிக்காமலிருக்கும் முறையைக் கடைப்பிடிக்க நான் விரும்பவில்லை" என்று அவர் சொன்னார்.

ஜனநாயக ஆட்சிமுறைக்குச் சில குறைபாடுகள் உண்டு. அவற்றில் ஒன்று 'பாபுலாரிட்டி'. ('பாபுலாரிட்டி' என்ற ஆங்கில வார்த்தைக்குப் 'பொது ஜனப் பிரியம்' என்று பொருள் செய்து கொள்ளலாம்.) ஜனநாயக முறையின் கீழ் 'பாபுலாரிட்டி'யை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் வேறு எந்த நல்ல காரியத்தையும் செய்ய முடியும். பொது ஜனங்களின் விருப்பு—வெறுப்பை முன்னிட்டுத்தான் பொது ஜனங்களுக்கு அரசாங்கத்தார் நன்மை செய்ய முடியும்.

ஏக சக்ராதிபதிகளும் சர்வாதிகாரிகளும் "பொது ஜனங்களுக்குத் தங்கள் சொந்த நன்மை இது என்று தெரியாது; எங்களுக்குத் தெரியும்; நாங்கள் செய்கிறோம்" என்று சொல்லலாம்.

ஜனநாயக மந்திரிகளோ பொது ஜன நன்மைக்கான திட்டங்களைக் கூடப் பொது ஜன ஆதரவுடனேதான் நடத்தி வைக்க முடியும்.

'பாபுலாரிட்டி'யை முன்விட்டு, மனச்சாட்சிக்கு விரோதமாகவோ, நேர்மை தவறியோ நடப்பது தவறு. அவ்விதம் செய்ய வேண்டுமென்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஆனால் ஜனநாயகத்தின் கீழ்ப் பொது ஜனங்களுக்குத் தொண்டு செய்ய விரும்பினால், 'பாபுலாரிட்டி'யை அதாவது பொது ஜனப் பிரியத்தை அலட்சியம் செய்வதற்கில்லை.

* * *

ஜனநாயக மந்திரிகள் மக்களின் மனோ தத்துவத்தைக் கொஞ்சம் அறியக் கூடியவர்களாகவும் இருக்க வேண்டியது அவசியம்.

வரி விதிக்கும் முறையை எடுத்துக் கொள்ளலாம். வருஷத்தில் ஒரு தடவையோ இரண்டு தடவையோ, 'வீட்டு வரி' 'மாட்டு வரி' 'காட்டு வரி' 'நிலவரி' 'உத்தியோக வரி' என்று மொத்தமாகப் போட்டு வாங்கிக் கொண்டால், கொடுக்கும்போது கஷ்டமாயிருந்தாலும் அத்துடன் அந்தக் கஷ்டம் முடிந்து போகிறது.

ஆயிரம் பதினாயிரம் மக்கள் தினம் தினம் பஸ்ஸில் போகும் போதும் வரும்போதும், பஸ் சத்தத்துடன் சர்க்கார் வரி சேர்த்துக் கொடுக்க வேண்டி நேரும்போது, அதனால் ஏற்படும் தொல்லையானது வரி கொடுக்கும் தொல்லையைக் காட்டிலும் பன்மடங்கு அதிகம் ஆகிறது.

அதோடு, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மணியும் பஸ்ஸில் பத்து இருபது பேர் சேர்ந்து போகும்போதெல்லாம் புதிய வரியைப் பற்றிச் சர்ச்சை செய்யவும், ஒரு சிலர் சர்க்காருக்கு விரோதமான எதிர்ப் பிரசாரம் செய்யவும், அதை மற்றவர்கள் கேட்டுக் கொண்டிருக்கவும் இடம் ஏற்படுகிறது.

மாஜி நிதி மந்திரி ஸ்ரீ கோபால ரெட்டியார் செய்த தவறுகளை நமது புதிய நிதி மந்திரி ஸ்ரீ ஸி. சுப்பிரமணியமும் தொடர்ச் செய்து கொண்டு போகக் கூடாது என்பதற்காகவே இதையெல்லாம் நாம் குறிப்பிட வேண்டியதாயிற்று.

# பதினாறில் ஒரு பங்கு நியாயம்!

இலங்கைப் பிரதமர் டட்லி சேன நாயகாவுக்கு ஒரு அணுக் கருணை பிறந்திருக்கிறது! இலங்கை இந்தியர்களின் கோரிக்கைக்குக் கொஞ்சம் இணங்கி வந்திருக்கிறார்! அவர்களுடைய பல கோரிக்கைகளில் இரண்டு கோரிக்கைகளைச் சரி என்று ஒப்புக்கொண்டு பரிகாரம் செய்யவும் முன் வந்திருக்கிறார். ரூபாய்க்கு ஒரு அணு விதம் கருணை காட்ட, பதினாறில் ஒரு பங்கு நியாயம் செய்ய, இசைந்திருக்கிறார். ஏதோ இந்த மட்டும் செய்தாரே என்று அவரை இந்தியத் தலைவர்களும் பாராட்ட முன் வந்திருக்கிறார்கள்.

ஸ்ரீ டட்லி ஒப்புக்கொண்ட அந்த இரண்டு விஷயங்கள் என்னவென்று பார்ப்போம்.

1. இலங்கையில் சாசுவதமாகக் குடியேறிய இந்தியர்கள் அந்த நாட்டுப் பிரஜா உரிமை கேட்கிறார்கள் அல்லவா! அதற்கு விண்ணப்பமும் போட்டிருக்கிறார்கள் அல்லவா!

விண்ணப்பத்தைப் பைசல் செய்யும் அதிகாரி பிரஜா உரிமை கோரும் இந்தியரைப் பார்த்து முதலில் இந்தக் கேள்வி கேட்பார்.

"நீர் இந்தியப் பிரஜையா! அதற்கு என்ன ருசு வைத்திருக்கிறீர்!" என்று கேட்பார்.

இதைப் படிக்கும் நேயர்களை,—சென்னையிலோ, பம்பாயிலோ, டில்லியிலோ இருப்பவர்களைப் பார்த்து, அதே கேள்வி கேட்டால், உங்களால் நிரூபிக்க முடியுமா! அதாவது நீங்கள் இந்தியப் பிரஜைகள்தான் என்று நிரூபிக்க முடியுமா! அதற்கு ருசுவாக தஸ்தவேஜு காட்ட முடியுமா!—ஒருநாளும் முடியாது.

நீங்கள் கறுப்பாகவோ சிவப்பாகவோ இருக்கிறீர்கள், இந்திய பாஷை பேசுகிறீர்கள், இந்தியாவில் இருக்கிறீர்கள்,—என்பதைக் கொண்டுதான் நீங்கள் இந்தியப் பிரஜை என்று தீர்மானிக்க வேண்டும். அதற்குத் தஸ்தவேஜு காட்டி எப்படி நிரூபிக்க முடியும்!

உங்கள் விஷயமே இப்படியிருந்தால், இலங்கையில் எத்தனையோ காலமாக வாழும் எழுதப் படிக்கத் தெரியாத இந்தியத் தொழிலாளிகளைப் பார்த்து, "முதலில் நீர் இந்தியப் பிரஜை அல்லது பாகிஸ்தானிப் பிரஜை என்பதை நிரூபியும்" என்று கேட்டால் எந்த முறையில் நிரூபிப்பார்?

அதிலும் தாய் தகப்பன் காலத்தில், பாட்டன் பூட்டன் காலத்தில் வந்து குடியேறியவர்கள் என்ன ருசுவைக் காட்டுவார்கள்!

# யுத்த முஸ்தீப்புகள்!




*சட்டசபையின் பட்ஜெட் கூட்டத்துக்கு எதிர்க் கட்சியினர் பலத்த யுத்த முஸ்தீப்புடன் வருகிறார்கள்!*

---

இவ்வளவு அபத்தமாக இருந்த நிபந்தனையை நீக்க வேண்டும் என்பது இலங்கை இந்தியத் தலைவர்களின் கோரிக்கைகளில் ஒன்று.

அதை இப்போது டட்லி சேனநாயகா ஒப்புக் கொண்டிருக்கிறார். "இந்தியப் பிரஜை என்ப தோடு ருசு வேண்டியதில்லை. அவ்விதம் வாக்கு மூலம் எழுதிக் கொடுத்தால் போதும்" என்று சொல்லியிருக்கிறார்.

இதை ஒரு வருஷத்துக்கு முன்பு ஒப்புக் கொண்டிருக்கக் கூடாதா!—ஒப்புக் கொண்டிருக்கலாம். அப்போது மனம் வரவில்லை; இப்போது மனம் வந்திருக்கிறது. சரி!

2. ஸ்ரீ டட்லி சேனநாயகா ஒப்புக் கொண்ட இரண்டாவது கோரிக்கையைப் பார்ப்போம்.

பெற்றோர்கள் மனுப் போடுகிறார்கள். தங்களுடைய மைனர் குமாரனுக்கும் சேர்த்து மனுப் போடுகிறார்கள்.

மனுப்போடும் போது பையனுக்கு வயது பதினேழு. ஆகையால் அவன் மனுப்போட முடியாது. பெற்றோர்தான் போட வேண்டும்.

மனுவை அதிகாரி ஒன்றரை வருஷம் கழித்து விசாரணைக்கு எடுத்துக் கொள்கிறார். அப்போது பையன் மேஜராகி விடுகிறான்!

மேஜரான பையனுக்குப் பெற்றோர் மனுப் போடக் கூடாது. ஆகையால் மனு தள்ளுபடி!

மேஜராகி விட்ட பையன் இப்போது சுயமாக மனுப்போடலாமா என்றால் அதுவும் சாத்தியமில்லை. ஏனெனில் மனுப் போட வேண்டிய கடைசித் தேதி முன்னமே போய் விட்டது! இப்போது காலாவதியாகி விட்டது! எப்படியிருக்கிறது கதை!

ஆம்; படிக்கிறவர்களுக்குக் கதை! பையனின் கதி அதோ கதி! அவன் எந்த தேசத்தையும் என் தேசம் என்று சொல்லிக் கொள்ள முடியாத உலக அநாதையாகத் திரிய வேண்டியதுதான்!

இந்த அபத்தமான நிலைமையை மாற்ற வேண்டும் என்று இலங்கை இந்தியத் தலைவர்கள் ஆரம்பத்திலிருந்து முட்டிக் கொண்டு வந்தார்கள். நேற்று வரை குட்டிச்சுவரில் முட்டிக் கொண்டதாகவே இருந்து வந்தது. இன்று டட்லியிடம் முட்டிக் கொண்டதில் பலன் ஏற்பட்டிருக்கிறது.

விண்ணப்பம் போடும் போது மைனராயிருந்து பிறகு மேஜரான பிள்ளைகள் விஷயத்தில் பெற்றோர் விண்ணப்பத்தையே ஏற்றுக் கொள்ளலாம் என்று சொல்லியிருக்கிறார்.

இவ்வளவு சாதாரண விஷயங்களுக்கு, கேட்டவுடன் நியாயம் என்று ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயங்களுக்கு, இவ்வளவு பாடுபட வேண்டியிருக்கிறதா என்று தோன்றுகிறதல்லவா!

ஆம்! இலங்கை இந்தியர்களின் கோரிக்கைகள் இவ்வளவு சர்வ இலகுவான நியாயக் கோரிக்கைகள்தான். ஆகையினாலேயே ஜவாஹர்லால் நேரு "எல்லாம் தெரிந்த விஷயந்தானே! தூது கோஷ்டி அனுப்பிப் புதிதாக என்ன தெரியப் போகிறது!" என்று சொல்கிறார்.

* * *

இலங்கை இந்தியத் தலைவர்கள் காந்திமகான் காட்டிய வழியைக் கண்டிப்பாகப் பின் பற்றிச் சாத்வீக முறையில் போராட்டம் நடத்தி வருகிறார்கள். அந்தப் போராட்டத்துக்கு ஆரம்ப பலன் இப்போது கிடைத்திருக்கிறது.

சாத்வீக முறையைத் தவிர வேறு எந்த முறையினாலும் இவ்வளவு பலன் கூடக் கிடைத்திராது. பலாத்கார முறைகளைக் கையாண்டிருந்தால் இலங்கை சர்க்காருக்கு அடக்கு முறைகளைக் கையாளுவது சுலபமாகப் போயிருக்கும்.

ஆகையால் இலங்கை இந்தியருக்கு இது பிரமாத வெற்றி யில்லாவிட்டாலும், காந்திமகானுடைய சாத்வீக முறைக்கு வெற்றி என்றே சொல்லலாம்.

இந்தியத் தலைவர்களின் கோரிக்கைகளில் நியாயம் இருக்கிறது என்று இலங்கைப் பிரதம மந்திரி டட்லி சேனநாயகாவை ஒப்புக் கொள்ளச் செய்ததே மிகப் பெரிய காரியம் அல்லவா!

# டவ் வாசனை சோப் போட்டி

இதில் கலந்து கொண்டு

**ஒரு ரொக்கப் பரிசு பெறுங்கள்**

**1st Prize Rs. 400/-** **3rd Prize Rs. 100/-**
**2nd Prize Rs. 200/-** **10 Prizes Rs. 10/-**

The Manufacturers of DOVE Toilet Soap have pleasure in announcing a competition for its users.

**Read the rules of the competition carefully.**

• Competitors are required to complete the following slogan "I always use Dove Soap because it **has/is/makes/leaves......**" (deleting the verbs not required)
with not more than 6 words, which will describe the attributes of Dove Toilet Soap. Examples are "is the Soap your face should choose", "makes your complexion so clear and lovely", "makes one feel so fresh", "leaves such fragrance on your skin"...etc. Slogans and entry forms must be completed in block capitals, in English, and must be written legibly in ink.

Anyone can enter as many slogans as they wish. Each slogan entered must be accompanied by 2 Dove Toilet Soap wrappers. No Member of the staff of Best & Co., (or any allied concern) or their families is permitted to enter. Prizes will be presented publicly in Madras and winners must be present in person to receive their prizes. If prize winners are unable to be present in person to receive their prizes, the prize money will be presented to a well known charity, whose name will be published in the Press.

Prizes will be as follows: **1st Prize Rs. 400/-**
**2nd Prize Rs. 200/-**
**3rd Prize Rs. 100/-**

10 consolation prizes of Rs. 10/- will also be presented. In addition, if any slogan does not win one of the first three prizes by virtue of the judgement of the selectors, but is used by the manufacturers as an advertisement within three months of the closing date of the competition, the entrant will be entitled to a special donation of Rs. 100/-. The competition will be judged by a Board of Selectors (whose names will be announced later) and their decision will be final and legally binding. Failure to comply with the rules noted above will automatically disqualify and no correspondence can be entered into. No money must be sent under any circumstances as the only condition of the competition is 2 Dove Toilet Soap wrappers. Entries and wrappers must be enclosed in a sealed envelope (annas 2 stamp) and posted to Dove Soap Competition, Best & Co. Ltd., P. B. No. 63, Madras. The closing date of the competition will be 31st August 1952, and winners will be notified before the 31st of October 1952. No competitor may win more than one prize.

**Advice to competitors:** The essentials of the slogans are literary aptness, suitability and originality and the judges will make their decisions with these points in view.

CUT HERE

To: Best & Co., Ltd., P. B. No. 63, Madras.

I have read and agree to abide by the rules of the Dove Soap Competition.

I have made ............ attempts and therefore enclose ............ wrappers from tablets of Dove Soap (two for each attempt.,

Name ............

Address ............

From whom purchased ............

NOTE: Dove Toilet Soap is sold everywhere in South India.
Extra entry forms may be obtained from retailers.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 36

## இருளில் ஓர் உருவம்!

சக்கரவர்த்தி என்று அழைக்கப்பட்ட சிறுவன் கொடுத்த வாளை நந்தினி வாங்கிக் கொண்டாள். அதை மார்போடு அணைத்துத் தழுவிக் கொண்டாள். பின்னர் அச்சிறுவனையும் தூக்கி எடுத்து அவனையும் சேர்த்து மார்புடன் அணைத்துத் தழுவிக் கொண்டாள். அவளுடைய கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பொழிந்தது.

மற்றவர்கள் சற்று நேரம் வரை இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு திகைத்து நின்றார்கள்.

ரவிதாஸன் முதலில் திகைப்பு நீங்கப் பெற்றுக் கூறினான்:—

"தேவி! சக்கரவர்த்தி நம்முடைய கோரிக்கையை நன்றாகப் புரிந்துகொள்ளவில்லை. புரிந்து கொள்ளாமல் தங்களிடம் வாளைக் கொடுத்து விட்டார். மறுபடியும் விளக்கமாகச் சொல்லி......"

நந்தினி அவனைத் தடுத்து நிறுத்தினாள். தழு தழுத்த குரலில் கூறினாள்:

"இல்லை, ஐயா, இல்லை! சக்கரவர்த்தி நன்றாய்ப் புரிந்து கொண்டுதான் வாளை என்னிடம் கொடுத்தார். என் கண்ணீரைப் பார்த்து நீங்கள் கலங்க வேண்டாம். வீரபாண்டிய சக்கரவர்த்தியின் படுகொலைக்குப் பழி வாங்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததை நினைத்துக் களிப்பு மிகுதியினால் கண்ணீர் விடுகிறேன்!" என்றாள்.

"தேவி! யோசித்துப் பாருங்கள்! நாங்கள் இத்தனை பேர் ஆபத்துதவிப் படையினர் உயிரோடிருக்கும்போது..." என்று சோமன் சாம்பவன் தொடங்கியதை நந்தினி தடுத்து நிறுத்தினாள்.

"யோசிக்க வேண்டியதே இல்லை. அந்தப் பொறுப்பு என்னுடையதுதான். உங்களுக்கும் வேலை யில்லாமற் போகவில்லை. உங்களில் பாதிப் பேர் சக்கரவர்த்தியைப் பத்திரமாகப் பஞ்சபாண்டவர் மலைக்குக் கொண்டு போய்ச் சேருங்கள். மற்றவர்கள் கடம்பூருக்கு வாருங்கள். சம்புவரையன் மாளிகைக்குள் வரக் கூடியவர்கள் வாருங்கள். மற்றவர்கள் வெளியில் சித்தமாகக் காத்திருங்கள். வேகமாகச் செல்லக் கூடிய குதிரைகளுடன் காத்திருங்கள். காரியம் வெற்றிகரமாக முடிந்த பின், கூடுமானால் எல்லாரும் உயிருடன் தப்பித்துச் செல்ல வேண்டும் அல்லவா?" என்றாள் நந்தினி.

ரவிதாஸன் முன்வந்து, "அம்மணி! ஒரு விஷயம் சொல்ல மறந்து போய் விட்டது. அதைச் சொல்ல அனுமதிக்க வேண்டும்" என்றான்.

"சொல்லுங்கள், ஐயா! சீக்கிரம் சொல்லுங்கள்! பழுவேட்டரையர் கொள்ளிடக்கரையில் நடக்கும் காளாமுகர்களின் மகா சங்கத்துக்குப் போயிருக்கிறார். அவர் திரும்பி வந்துவிடுவதற்

குள்ளே நான் அரண்மனை போய்ச் சேர வேண்டும்!" என்றாள் நந்தினி.

"நமது முதற் பகைவன் ஆதித்த கரிகாலன் கடம்பூர் சம்புவரையன் மாளிகைக்கு வந்து சேர்வான் என்று சொன்னீர்கள் அல்லவா? அது அவ்வளவு நிச்சயமில்லை" என்றான் ரவிதாஸன்.

"எந்தக் காரணத்தைக் கொண்டு அவ்விதம் சொல்கிறீர்!" என்று கேட்டாள் நந்தினி.

"தகுந்த காரணத்தைக் கொண்டுதான் சொல்கிறேன். கடம்பூர் மாளிகைக்கு எக்காரணத்தைக் கொண்டும் வரவேண்டாம் என்று ஆதித்த கரிகாலனுக்கு ஓலை போகிறது. பழையாறை இளைய பிராட்டியும் முதன் மந்திரி அநிருத்தரும் அவ்விதம் செய்தி அனுப்பியிருக்கிறார்கள்......"

"அந்த விவரம் எனக்குத் தெரியாது என்று நினைத்தீர்?"

"தெரிந்திருந்தும் அவன் கடம்பூருக்கு வருவான் என்று எதிர்பார்க்கிறீர்களா?"

"ஆம்; அவசியம் எதிர்பார்க்கிறேன். ஆதித்த கரிகாலருடைய இயல்பு அந்தப் பழையாறைப் பெண் பாம்புக்குத் தெரியாது; அன்பில் பிரம்ம ராட்சதனுக்கும் தெரியாது; மாய மந்திர வித்தைகளில் தேர்ந்த உமக்குங் கூடத் தெரியவில்லை. எந்தக் காரியத்தையாவது செய்ய வேண்டாம் என்று யாரேனும் தடுத்தால், அதைத்தான் ஆதித்த கரிகாலர் கட்டாயமாகச் செய்வார். அது எனக்குத் தெரியும்; நிச்சயமாகத் தெரியும். ஆதித்த கரிகாலர் அருள்மொழி வர்மனைப் போன்ற எடுப்பார் கைப்பிள்ளை அல்ல. மதுராந்தகனைப் போன்ற பயங்கொள்ளிப் பேதை அல்ல. கடம்பூருக்கு வரவேண்டாமென்று தமக்கையும் முதன் மந்திரியும் செய்தி அனுப்பியிருப்பதனாலேயே கட்டாயம் ஆதித்த கரிகாலர் கடம்பூருக்கு வந்து சேருவார்!" என்றாள் நந்தினி.

"தேவி! அதையும் தாங்கள் பூரணமாக நம்பியிருக்க வேண்டாம். அவர்கள் அனுப்பிய செய்தி காஞ்சிக்குப் போய்ச் சேராது!" என்றான் ரவிதாஸன்.

"என்ன சொல்லுகிறீர், ஐயா! சற்று விளக்கமாகச் சொல்லும்!" என்றாள் நந்தினி. அவளுடைய குரலில் இப்போது பரபரப்புத் தொனித்தது.

"தேவி! ஆதித்த கரிகாலனுக்குச் செய்தி யார் மூலமாக அனுப்பப்பட்டிருக்கிறது என்பதும் தங்களுக்குத் தெரியுமா?" என்று ரவிதாஸன் கேட்டான்.

"நிச்சயமாகத் தெரியாது: ஆனால் ஊகிக்க முடியும்."

"நல்லது; ஊகிக்க வேண்டிய அவசியமில்லை. அவனை நாங்கள் பிடித்துக் கொண்டே வந்திருக்கிறோம். சக்கரவர்த்தி மழைக்கு ஒதுங்கியிருந்த மண்டபத்தில் அவனும் இருந்தான். நம்முடைய இரகசியங்கள் எல்லாம் அவனுக்குத் தெரியும். அவனை மேலே உயிருடன் போக விடுவது நமக்கு நாமே சர்வ நாசத்தைத் தேடிக் கொள்வதாகும். இடும்பன்காரி! எங்கே, அந்த ஒற்றனை இங்கே அழைத்துக் கொண்டு வா!" என்றான் ரவிதாஸன்.

இடும்பன்காரி பள்ளிப்படைக் கோவிலை நோக்கிப் போனான். அவனுடன் இன்னும் இரண்டு பேரும் போனார்கள். நந்தினி அந்தத் திசையை உற்று நோக்கத் தொடங்கினாள். இத்தனை நேரமும் கடுகடு வென்று இருந்த அவளுடைய முகத்தில் இப்போது மறுபடியும் மோகனப் புன்னகை தவழ்ந்தது.

*　　　*　　　*

இடும்பன்காரியும் இன்னும் இரண்டு பேரும் வந்தியத் தேவனை நெருங்கினார்கள். அலுத்துச் சலித்துப் போய் அரைத் தூக்கமாக உட்கார்ந்திருந்த அந்த வீரன் மீது திடீரென்று பாய்ந்தார்கள். வந்தியத் தேவன் அவர்களோடு மல் யுத்தம் செய்யலாமா என்று ஒரு கணம் உத்தேசித்தான். பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். என்னதான் செய்கிறார்களோ பார்க்கலாம் என்று சும்மா இருந்தான். ஒரு பெரிய கயிற்றினால் அவனுடைய கைகளைச் சேர்த்து உடம்போடு கட்டினார்கள். பிறகு அவனுடைய இரு தோள்களையும் இரண்டு பேர் பிடித்து நடத்தி அழைத்துக் கொண்டு வந்து நந்தினியின் முன்னால் நிறுத்தினார்கள்.

வந்தியத் தேவன் நந்தினியைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலும் இப்போது தெரியவில்லை. அமைதி குடி கொண்டிருந்தது.

"ஐயா! மறுபடியும்........." என்று ஆரம்பித்தாள்.

"ஆம், தேவி! மறுபடியும் வந்து விட்டேன்! ஆனால் நானாக வரவில்லை!" என்று சொல்லிச் சுற்றிலுமுள்ளவர்களை நோக்கினான்.

நந்தினியின் அருகில் இருந்த சிறுவன் "அம்மா! இவன்தான் என்னை இருட்

டில் பிசாசு விழுங்காமல் காப்பாற்றியவன். இவனை ஏன் கட்டிப் போட்டிருக்கிறது?" என்று கேட்டான்.

வந்தியத்தேவன் சிறுவனைப் பார்த்து "குழந்தை! சும்மா இரு! பெரியவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது குறுக்கே பேசக் கூடாது. பேசினால் உன்னைப் புலி விழுங்கி விடும்!" என்றான்.

"புலியை நான் விழுங்கி விடுவேன்!" என்றான் சிறுவன்.

"மீனால் புலியை விழுங்க முடியுமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

அவனைச் சுற்றிலும் இருந்தவர்களின் கண்டங்களிலிருந்து ஒரு பயங்கரமான உறுமல் சத்தம் வெளி வந்தது. அது வந்தியத் தேவனைக் கூட ஒரு கணம் மெய் சிலிர்க்கச் செய்தது.

ரவிதாஸன் உரத்த குரலில் "தேவி! கேட்டீர்களா? இவனை இனி உயிருடன் தப்பிச் செல்ல விட முடியாது. முன் இரண்டு தடவைகளில் தங்கள் விருப்பத்துக்காக இவனை உயிருடன் தப்பிச் செல்ல விட்டோம். இனிமேல் அப்படி இவனை விட முடியாது" என்றான்.

வந்தியத்தேவன், "மந்திரவாதி! இது என்ன இப்படிப் பெரிய பொய்யாகச் சொல்லுகிறாய்? நீயா என்னை உயிருடன் விட்டாய்? நான் அல்லவா உன்னைத் தப்பிப் போக விட்டேன்? தேவி! இந்த மந்திரவாதியைக் கொஞ்சம் கவனித்துப் பார்த்துச் சொல்லுங்கள்! இவன் உண்மையில் ரவிதாஸன்தானா? அல்லது ரவிதாஸனுடைய பிசாசா?" என்று கேட்டான்.

ரவிதாஸன் பயங்கரமாகச் சிரித்தான். "ஆம்; நான் பிசாசுதான்! உன்னுடைய இரத்தத்தை இன்று குடிக்கப் போகிறேன்" என்றான்.

மீண்டும் அங்கிருந்தவர்களின் தொண்டைகளிலிருந்து பயங்கர உறுமல் குரல் வெளியாயிற்று.

இதற்குள் சிறுவன், "அம்மா! இவனிடம் ஒரு நல்ல குதிரை இருக்கிறது. அதை எனக்குக் கொடுக்கச் சொல்லுங்கள்!" என்றான்.

"குழந்தை! நீ என்னுடன் வந்துவிடு! உன்னை என் குதிரையின்மேல் ஏற்றி அழைத்துக் கொண்டு போகிறேன்" என்றான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் வந்தியத்தேவனை நோக்கிக் கோரமாக விழித்து "அடே! வாயை மூடிக் கொண்டிரு!" என்று சொல்லி விட்டு, நந்தினியைப் பார்த்து, "தேவி! சீக்கிரம் கட்டளையிடுங்கள்!" என்றான்.

நந்தினி நிதானமாக "இவர் எப்படி இங்கு வந்தார்? எப்போது வந்தார்?" என்று கேட்டாள்.

"சக்கரவர்த்தி மறைக்கு ஒதுங்கியிருந்த மண்டபத்திலிருந்து அவரை இந்த ஒற்றன் எடுத்துக் கொண்டு ஓடி விடப் பார்த்தான். நல்ல சமயத்தில் போய் நாங்கள் தடுத்துப் பிடித்துக் கொண்டோம். ஒரு கணம் தாமதித்திருந்தால் விபரீதமாய்ப் போயிருக்கும்" என்றான் ரவிதாஸன்.

"ஐயா! இவர்கள் சொல்வது உண்மையா?" என்று நந்தினி கேட்டாள்.

"தங்களைச் சேர்ந்தவர்கள் உண்மை சொல்லக் கூடியவர்களா என்பது தங்களுக்குத்தானே தெரியும்? எனக்கு எப்படித் தெரியும், தேவி?" என்றான் வந்தியத்தேவன்.

நந்தினியின் முகத்தில் தோன்றிய புன்னகை மின்னலைப் போல் மறைந்தது. அவள் ரவிதாஸனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் எல்லாரும் சற்று அப்பால் சென்றிருங்கள். நான் இவரிடம் சில விஷயங்கள் தனியாகக் கேட்டு அறிய வேண்டும்" என்றாள்.

"தேவி! நேரம் ஆகிறது. அபாயம் நெருங்குகிறது. இந்த வேளையில்......" என்று ரவிதாஸன் கூறுவதற்குள், நந்தினி கடுமையான குரலில், "சற்று முன் நாம் செய்து கொண்ட நிபந்தனையை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். மறு வார்த்தை சொல்லாமல் உடனே அகன்று செல்லுங்கள். சக்கரவர்த்தியையும் அப்பால் அழைத்துப் போங்கள்!" என்று கூறி, சிறுவனுடைய காதில் "குமாரா! சற்று அவர்களுடன் நகர்ந்து போ!- உனக்கு இவரிடமிருந்து குதிரை வாங்கித் தருகிறேன்" என்றாள்.

ரவிதாஸன் முதலியவர்கள் பின்னர் மறு வார்த்தை பேசாமல் அந்தச் சிறுவனையும் அழைத்துக் கொண்டு அவசரமாக அப்பால் போனார்கள்.

* * *

நந்தினி வந்தியத்தேவனை இலேசான தீவர்த்தி வெளிச்சத்தில் ஊடுருவிப் பார்த்து, "ஐயா! உமக்கும் எனக்கும் ஏதோ ஒரு துவந்தம் இருப்பதாகத் தோன்றுகிறது!" என்றாள்.

"அம்மணி! அந்தத் துவந்தம் மிகப் பொல்லாததாயிருக்கிறது; மிகக் கெட்டியாகவும் இருக்கிறது. என் உடம்பையும் கைகளையும் சேர்த்து இறுக்கிக் கட்டியிருக்கிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"உம்முடைய விளையாட்டுப் பேச்சைக் கொஞ்சம் நிறுத்தி வைத்துக் கொள்ளுங்கள். வேண்டுமென்று இங்கு வந்தீரா! தற்செயலாக வந்தீரா?"

"வேண்டுமென்றும் வரவில்லை; தற்செயலாகவும் வரவில்லை. தங்களுடைய ஆட்கள்தான் பலவந்தமாக என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள். இல்லாவிடில், இத்தனை நேரம் கொள்ளிடக் கரையை அடைந்திருப்பேன்."

"என்னைப் பார்க்கும்படி நேர்ந்ததில் உமக்கு அவ்வளவு கஷ்டம் என்று தெரிகிறது. என்னைப் பிரிந்து போவதற்கு அவ்வளவு ஆவல் என்றும் தெரிகிறது."

"தங்களைப் பார்க்க நேர்ந்ததில் எனக்குக் கஷ்டம் இல்லை, தேவி! தங்களைப் பிரிந்து போவதற்குத்தான் உண்மையில் வருத்தமாயிருக்கிறது. தாங்கள் மட்டும் அனுமதி கொடுங்கள்; ஒரு பக்கத்தில் அந்தக் கிழட்டுப் பழுவேட்டரையரிடமும் இன்னொரு பக்கத்தில் இந்தப் பயங்கர மந்திரவாதிகளிடமும் அகப்பட்டுக் கொண்டு தாங்கள் திண்டாடுகிறீர்கள். ஒரு வார்த்தை சொல்லுங்கள். இவர்களிடமிருந்தெல்லாம் தங்களை விடுதலை செய்து அழைத்துப் போகிறேன்......"

"எங்கே அழைத்துப் போவீர்கள்!"

"இலங்கைத் தீவின் காடுகளில் அநாதையைப்போல் அலைந்து கொண்டிருக்கும் தங்கள் அன்னையிடம் அழைத்துப் போய் விடுகிறேன்" என்றான் வந்தியத்தேவன்.

நந்தினி ஏமாற்றம் தொனிக்க ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

"நானும் அப்படி அநாதையாக அலைய வேண்டும் என்று விரும்புகிறீரா? ஒருவேளை அத்தகைய காலம் வந்தாலும் வரலாம். அப்போது அன்னையிடம் அழைத்துப்போக உம்முடைய உதவியை அவசியம் நாடுவேன். அதற்கு முன்னால், என்னுடைய எண்ணம் நிறைவேற வேண்டும். அது நிறைவேறுவதற்கு உதவி செய்வீரா?" என்று கேட்டாள்.

"அம்மணி! தங்கள் மனதிற் கொண்ட





எண்ணம் என்னவென்று தெரிந்தால் அல்லவா அதற்கு உதவி செய்வதைப் பற்றி நான் சொல்ல முடியும்?'' என்றான் வந்தியத்தேவன்.

''உண்மையான பிரியம் உள்ளவர்கள் இப்படிச் சொல்லமாட்டார்கள். எண்ணம் என்னவென்பதைத் தெரிந்து கொள்ளாமலே அதை நிறைவேற்றுவதற்கு உதவி செய்ய முன் வருவார்கள்.''

''பிரியமுள்ளவர்கள் சமயத்தில் எச்சரிக்கை செய்து ஆபத்திலிருந்து காப்பாற்ற முயல்வார்கள். அம்மணி! தங்களை இந்தக் கிராதகர்கள் ஏதோ சூழ்ச்சி செய்து பெரிய அபாயத்தில் சிக்க வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய காரியத்துக்கு உங்களை உபயோகப் படுத்திக் கொள்ளப் பார்க்கிறார்கள்......''

''நீர் கூறுவது தவறு! நான்தான் இவர்களை என்னுடைய காரியத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்ளப் பார்க்கிறேன்! இதை நீர் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளும்.''

''ஒரு சிறு குழந்தையை எந்தக் காட்டிலிருந்தோ பிடித்துக் கொண்டு வந்து தங்களை ஏமாற்றுகிறார்கள்......''

''குழந்தை எதற்காக என்று உமக்குத் தெரியுமா?''

''பாண்டியன் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்துப் பட்டம் கட்டுவதற்காக...'' என்றான்.

''மறுபடியும் தவறாகச் சொல்கிறீர். பாண்டியன் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்க மட்டும் அல்ல; துங்கபத்திரையிலிருந்து இலங்கை வரையில் பரந்து கிடக்கும் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாதனத்தில் அமர்த்தி முடி சூட்டுவதற்காக!''

''அம்மம்மா! யாருடைய உதவியைக் கொண்டு இந்த மகத்தான காரியத்தைச் சாதிக்கப் போகிறீர்கள்? இதோ சுற்றிலும் நிற்கிறார்களே?—இந்த நரிக் கூட்டத்தின் உதவியைக் கொண்டா? சோழ சாம்ராஜ்யத்தின் இருபது லட்சம் வீராதிவீரர்கள் கொண்ட மாபெருஞ் சேனையை, பகலில் வளைகளில் ஒளிந்திருந்து இரவு நேரத்தில் வெளிப் பட்டு வரும் இந்தப் பத்து இருபது நரிகளின் துணை கொண்டு வென்று விடுவீர்களா?''

''நான் இவர்களை மட்டும் நம்பியிருக்கவில்லை! இதோ என் கையிலுள்ள வாளை நம்பியிருக்கிறேன். இதன் உதவியினால் என் மனதில் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றுவேன்.''

"அம்மணி! அந்த வாளைத் தாங்கள் ஒரு நாளும் உபயோகப் படுத்தப் போவதில்லை. அதற்கு வேண்டிய பலம் தங்கள் கையிலும் இல்லை; தங்கள் நெஞ்சிலும் இல்லை!"

"ஏன் அப்படிச் சொல்கிறீர்?"

"ஏதோ என் மனத்தில் தோன்றியதைக் கூறினேன்."

"நீர் சொல்வது முற்றும் தவறு என்று இந்த இடத்திலேயே என்னால் நிரூபித்துக் காட்ட முடியும்."

"அப்படியானால் நான் பாக்கியசாலிதான். தங்கள் திருக்கரத்தினால் வெட்டுப்பட்டுச் சாவதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா?" என்று கூறி வந்தியத்தேவன் வெட்டுப்படுவதற்கு ஆயத்தமாவது போல் கழுத்தை வளைத்துத் தரையைப் பார்த்துக்கொண்டு நின்றான்.

"என் திருக் கரத்தினால் வெட்டுப்படுவதற்குத் தானா ஆசைப்படுகிறீர்? கிரீடம் சூட்டப்படுவதற்கு விரும்பவில்லையா?" என்றாள் நந்தினி.

வந்தியத்தேவன் நிமிர்ந்து பார்த்து, "தங்கள் வசமுள்ள கிரீடத்தை எத்தனை பேருக்குத் தான் சூட்டுவீர்கள்?" என்று வினவினான்.

"அது என்னுடைய இஷ்டம். முடிவாக யாருக்குச் சூட்ட வேண்டுமென்று பிரியப்படுகிறேனோ, அவருடைய சிரஸில் சூட்டுவேன்."

"அப்படியானால், இந்தச் சிறு பிள்ளையின் கதி என்ன ஆவது?"

"அவனுக்கு முடி சூட்டுவதும் சூட்டாததும் என் இஷ்டந்தானே?"

"தேவி! தங்களுக்கு யாருக்கு இஷ்டமோ அவருக்கு முடி சூட்டுங்கள். எனக்கு வேண்டியதில்லை."

"ஏன்?"

"என்னுடைய சிரஸிலுள்ள சுருட்டை மயிரின் அழகைப் பற்றிப் பலரும் சொல்லியிருக்கிறார்கள். கிரீடம் வைத்துக் கொண்டு அந்த அழகைக் கெடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை."

"உமது வேடிக்கைப் பேச்சை நீர் விடமாட்டீர். நல்லது, ஐயா! பொன்னியின் செல்வன் கடலில் விழுந்து இறந்த செய்தியைக் கேட்டதும் இளைய பிராட்டி என்ன செய்தாள்? ரொம்ப துக்கப்பட்டாளா?" என்று நந்தினி திடீரென்று பேச்சை மாற்றிக் கேட்டாள்.

வந்தியத்தேவன் சிறிது திகைத்து விட்டு, "பின்னே, துக்கமில்லாமல் இருக்குமா? ஸ்திரீகள் எல்லோருமே இதயமற்றவர்களாக இருப்பார்களா?" என்றான்.

"அந்தக் கொடும்பாளூர்ப் பெண் ஓடையில் விழுந்து உயிரை விடப் பார்த்தாளாமே? அது உண்மையா? அவளை யார் எடுத்துக் காப்பாற்றினார்கள்?" என்று கேட்டாள்.

உடனே வானதிக்கு நேர்ந்த ஆபத்தைக் குறித்து வந்தியத் தேவனுக்கு ஞாபகம் வந்தது. அவளுடைய கதி என்ன ஆயிற்றோ என்ற நினைவில் மூழ்கி வந்தியத் தேவன் கேள்விக்குப் பதில் சொல்லாமலிருந்தான்.

நந்தினி குரலைக் கடுமைப் படுத்திக் கொண்டு "சரி; அதையெல்லாம் பற்றி நீர் ஒன்றும் சொல்ல மாட்டீர். எனக்குத் தெரியும். ஆதித்த கரிகாலர் கடம்பூர் மாளிகைக்கு வராதபடி நீர் தடுக்கப் போகிறீரா?" என்று கேட்டாள்.

"தடுப்பதற்குப் பிரயத்தனம் செய்வேன்" என்றான் வந்தியத்தேவன்.

"உம்மால் அது முடியாது என்று நான் சொல்லுகிறேன்."

"என்னால் முடியும் என்று நானும் சொல்லவில்லை, தேவி! பிரயத்தனம் செய்வேன் என்றுதான் சொன்னேன். இளவரசர் ஒன்று செய்ய நினைத்து விட்டால், அதை மாற்றுவது எளிதன்று."

"ஆதித்த கரிகாலரின் இயல்பை நீர் நன்றாய் அறிந்து கொண்டிருக்கிறீர்."

"என்னைவிட அதிகமாகத் தாங்கள் அறிந்திருக்கிறீர்கள்."

"நல்லது; நான் எவ்வளவுதான் சொன்னாலும் நீர் என் கட்சியில் சேர மாட்டீர். என் எதிரியின் கட்சியில்தான் இருப்பீர். அப்படித்தானே?"

"அம்மணி! தங்கள் எதிரி யார்?"

"என் எதிரி யார்? பழையாறை இளவரசிதான்! வேறு யார்?"

"அது தங்கள் மனோ கற்பனை! தேவி! தங்களுக்கு ஒரு உண்மையை, முக்கியமான உண்மையை, தெரிவிக்க விரும்புகிறேன்......"

"போதும், போதும்! நீர் உண்மை என்று சொல்ல ஆரம்பித்தால் அது வடிகட்டின கோட்டைப் பொய்யாயிருக்கும். எனக்குத் தெரியாதா? உமது உண்மையை நீரே வைத்துக் கொள்ளும்!" என்று நந்தினி குரோதத்துடன் கூறிவிட்டு, கையைத் தட்டினாள். ரவிதாஸன் முதலியவர்கள் உடனே நெருங்கி வர ஆரம்பித்தார்கள்.

**வ**ந்தியத் தேவன் தனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைத் தான் சரியாக உபயோகப் படுத்திக்கொள்ளவில்லை என்

பதை உணர்ந்தான். இந்த ராட்சஸி என்னைக் கொன்று விடும்படிதான் இவர்களுக்குக் கட்டளையிடப் போகிறாள். கடவுளே! எத்தகைய சாவு! போர்க்களத்தில் எதிரிகளுடன் போராடி வீர மரணம் அடையக் கூடாதா? இப்படியா என் தலையில் எழுதியிருந்தது?

ரவிதாஸன் கோஷ்டியார் அருகில் வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

இரையை நெருங்கிய ஓநாய்க் கூட்டம் உறுமுவதுபோல் அவர்கள் உறுமிக் கொண்டிருந்தார்கள்.

"ராணி! தாங்கள் என்னதான் சொன்னாலும் இவன் வழிக்கு வர மாட்டான் என்று எனக்குத் தெரியும். தாங்கள் உடனே புறப்படுங்கள். இவனை நாங்கள் இந்தப் புண்ணிய ஸ்தலத்தில் பலி கொடுத்து விட்டுக் கிளம்புகிறோம்" என்றான் ரவிதாஸன்.

"மந்திரவாதி! ஜாக்கிரதை! என்னுடைய விருப்பம் அதுவன்று. இவரை உங்களில் யாரும் எதுவும் செய்யக் கூடாது. இவரை எவனாவது தொட்டால் அவனை நானே இந்தக் கத்தியினால் வெட்டிக் கொன்று பழி வாங்குவேன்!" என்று நந்தினி கர்ஜித்தாள்.

ரவிதாஸன் முதலியோர் திகைத்து நின்றார்கள்.

"இவரால் எனக்கு இன்னும் பல காரியம் ஆகவேண்டியிருக்கிறது. தெரிகிறதா? நான் இதோ புறப்படுகிறேன். நீங்களும் புறப்படுங்கள். இவர் அவருக்கு விருப்பமான வழியில் போகட்டும். யாரும் இவரைத் தடை செய்ய வேண்டாம்!" என்றாள் நந்தினி.

ரவிதாஸன் "தேவி! ஒரு விண்ணப்பம்! தங்கள் சித்தப்படி செய்யக் காத்திருக்கிறோம். ஆனால் இவனிடம் குதிரை இருக்கிறது. இவனை முதலில் போகவிடுவது நல்லதா? கொஞ்சம் யோசித்துச் சொல்லுங்கள்!" என்றான்.

"நல்லது; இவரை அந்தப் பள்ளிப் படைக் கோவில் தூணுடன் சேர்த்துக் கட்டி விடுங்கள். கட்டை அவிழ்த்துக் கொண்டு புறப்பட இவருக்குச் சிறிது நேரம் ஆகும். அதற்குள் இந்தப் பள்ளிப்படைக் காட்டை நீங்கள் தாண்டிப் போய் விடலாம்" என்றாள்.

* * *

**வ**ந்தியத்தேவன் பள்ளிப்படைத் தூணுடன் சேர்த்துக் கட்டப் பட்டிருந்தான். சற்றுத் தூரத்தில் அவன் குதிரை ஒரு மரத்தில் கட்டப் பட்டிருந்தது.

நந்தினி பல்லக்கில் ஏறிக் கொண்டு போய் விட்டாள்.

சிம்மாதனத்தை இரண்டு ஆட்கள் தூக்கிச் சென்றார்கள்.

ரவிதாஸன் கோஷ்டியார் சிறுவனை அழைத்துக் கொண்டு விரைந்து போய் விட்டார்கள்.

அவர்களுடன் சென்ற தீவர்த்தியின் வெளிச்சமும் சிறிது சிறிதாக மங்கி மறைந்து விட்டது.

வந்தியத்தேவனைச் சுற்றிலும் கன்னங்கரிய காரிருள் சூழ்ந்தது.

சிறிது நேரத்துக்கு முன்னால் அங்கு பார்த்த காட்சிகள், நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் கனவோ எனத் தோன்றியது.

இருட்டில் ராட்சத வௌவால்கள் சடபட வென்று தங்கள் அகன்ற சிறகுகளை அடித்துக் கொண்டன.

ஊமைக் கோட்டான்கள் உறுமின.

நரிகள் அகோரமான குரலில் முறை வைத்து ஊளையிட்டன.

ஊளை யிட்டுக் கொண்டே அவை நெருங்கி நெருங்கி வருவதுபோல் வந்தியத் தேவனுக்கு உணர்ச்சி ஏற்பட்டது.

காட்டில் இனந் தெரியாத உருவங்கள் பல நடமாடின.

கடம்பூர் மாளிகையில் அவன் கண்ட கனவு நினைவுக்கு வந்தது.

ஆயிரம் நரிகள் வந்து தன்னைச் சூழ்ந்து கொண்டு பிடுங்கித் தின்னப் போவதாக எண்ணி நடுங்கினான்.

அவசர அவசரமாகக் கட்டுக்களை அவிழ்த்துக் கொள்ளப் பார்த்தான். இலேசில் அக்கட்டுக்கள் அவிழ்கிற விதமாகத் தெரியவில்லை.

வெளிச்சம் இருந்தால் கட்டுக்களை அவிழ்ப்பது சிறிது சுலபமாயிருக்கும்.

ஆனால் வெளிச்சம் என்ற அறிகுறியே அங்கு இல்லை.

மின்னல் வெளிச்சமும் இல்லை; மின்மினி வெளிச்சங்கூட இல்லை.

வானத்தில் ஒருவேளை மேகங்கள் அகன்று நட்சத்திரங்கள் தோன்றியிருந்தாலும் அவற்றின் வெளிச்சம் அந்தக் காட்டுக்குள் நுழைய இடமில்லை.

ஆகா! அது என்ன சத்தம்?

காட்டில் எத்தனையோ ஜந்துக்கள் நடமாடும். அதில் என்ன அதிசயம்?

இல்லை; இது மனிதனுடைய காலடிச் சத்தம் மாதிரி இருக்கிறதே!

குதிரை இலேசாகக் கனைத்தது. கால்களை மாற்றி மாற்றி வைத்து அவஸ்தைப் பட்டது. ஒரு வேளை புலி, கிலி வருகிறதா என்ன?

வந்தியத்தேவன் கட்டை அவிழ்க்க அவசரப்பட்டான். பயனில்லை.

அதோ ஒரு உருவம். அந்தக் காரிருளில் ஒரு கரிய நிழல் போன்ற உருவம். மனித உருவமா? அல்லது......வேறு என்னவா யிருக்க முடியும்?

அது நெருங்கி நெருங்கி வந்தது.

வந்தியத்தேவன் தன்னுடைய மனோ தைரியம் முழுவதையும் சேகரித்துக் கொண்டான்.

தன்னுடைய தேகத்தின் பலம் முழு வதையும் காலில் சேர்த்துக் கொண்டான்.

ஓங்கி ஒரு உதை விட்டான்!

"வீல்" என்ற சத்தமிட்டுக்கொண்டு அந்த உருவம் பின்னால் தாவிச் சென்றது.

சிறிது தூரம் பின்னால் சென்றதும் "டணார்" என்று ஒரு சத்தம். பள்ளிப் படைச் சுவரில் அது மோதிக்கொண்டது போலும்!

பின்னர் அங்கேயே அந்த உருவம் சிறிது நேரம் நின்றது. பள்ளிப் படைச் சுவரில் சாய்ந்து கொண்டு நிற்பதாகத் தோன்றியது.

இருட்டில் விவரம் தெரியா விட்டா லும் அந்த உருவம் தன்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதுபோல் வந்தி யத்தேவனுக்கு உணர்ச்சி ஏற்பட்டது.

கட்டுக்களை அவிழ்த்துக் கொள்வ தற்கு மேலும் அவசரமாக அவன் முயன் றான். அந்த மந்திரவாதிப் பிசாசுகள் இவ்வளவு பலமாக முடிச்சுக்களைப் போட்டு விட்டன! ஆகட்டும்; மறு தடவை அந்த ரவிதாஸனைப் பார்க்கும் போது சொல்லிக் கொடுக்கலாம்!

அந்த உருவம் இடம் விட்டுப் பெயர்ந் தது. பள்ளிப் படைக்குள்ளே போவது போலத் தோன்றியது.

சிறிது நேரத்துக்கெல்லாம் பள்ளிப் படைக் கோவிலுக்குள் கூழாங் கற்கள் மோதுவது போன்ற 'டண்' 'டண்' சத்தம் சில முறை கேட்டது.

கோவில் வாசலில் வெளிச்சம்.

அதோ அந்த உருவம் கையில் ஒரு சுளுந்தைப் பிடித்துக் கொண்டு கோவி லுக்கு வெளியே வருகிறது.

தன்னை நோக்கி வருகிறது.

அது ஒரு காளாமுக வீர சைவனின் உருவம். நீண்ட தாடியும் சடை முடியும் மண்டை ஓட்டு மாலையும் அணிந்த பயங் கரமான உருவம்.

வந்தியத்தேவன் அருகில் வந்து வெளிச் சத்தைத் தூக்கிப் பிடித்து அவனை உற் றுப் பார்த்துக் கொண்டு நின்றது.

# திருநெல்வேலித் திருவிழா

ரா. கி.

2

தமிழ் நாட்டில் எழுத்தாளர் வ. ரா. அவர்களின் பெயர் மிகப் பிரபலமானது. எழுத்தாளர் ப. ரா. வின் பெயர் அவ்வளவு பிரபலமடையவில்லை. ஆனால் எழுத்தாளர் உலகிற்குள்ளே ப. ரா. வின் பெயரை அனைவரும் அறிவார்கள். "உங்களுக்கு ஒரு வ. ரா. இருந்தால், எங்களுக்கு ஒரு ப. ரா. இருக்கிறார்" என்று திருநெல்வேலி எழுத்தாளர்கள் பெருமையுடன் சொல்லிக் கொள்வார்கள். ஸ்ரீ வ. வே. சு. ஐயரின் "பால பாரதி"யை ஞாபகப் படுத்தும்படியாக ஸ்ரீ ப. ராமஸ்வாமி "உதய பாரதி" என்னும் பத்திரிகையைச் சில காலம் சிறப்பாக நடத்தினார். பண நஷ்டப்பட்ட பிறகு மூடு விழாவும் நடத்தினார்.

"உதய பாரதி"க்கு முன்னும் பின்னும் ஸ்ரீ ப. ரா. தேசிய இயக்கங்களில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அதனால் ஏற்படக் கூடிய கஷ்ட நஷ்டங்களையும் அடைந்தார். தியாகத் தீயில் புடம் போட்ட தங்கமானார். அவர் தங்கமா யிருந்து என்ன பயன்! காலட்சேபத்துக்குச் செப்புக் காசுகள் கிடைத்தாலே போதும் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது.

இச்சமயத்தில் தமிழ் எழுத்தாளர் உலகத்தில் ஒரு பெரிய அணுகுண்டு விழுந்தது. ஆனால் அது விஷப் புகையையும் நாசத்தையும் பரப்பிய அணுகுண்டு அல்ல. அதிசயத்தையும் மகிழ்ச்சியையும் பரப்பிய அணுகுண்டுதான்.

எழுத்தாளர் ப. ரா. திருநெல்வேலி நகரசபையின் சேர்மன் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார் என்ற செய்திதான் அது.

திருநெல்வேலி பெரும் பணக்காரர்களும், பண்ணையார்களும் வாழும் நகரம். பிரபல அட்வகேட்டுகளும் வர்த்தகர்களும் எத்தனையோ பேர் வசிக்கும் நகரம். அரசியல் கோஷ்டிகளும் போட்டிகளும் சிக்கல்களும் சச்சரவுகளும் மற்ற ஊர்களைப் போலவே அங்கும் உண்டு. அறிவு அதிகமாயுள்ள இடத்தில் குற்றம் குறைகள் கண்டு பிடிக்கும் இயல்பு அதிகமாயிருப்பதும் இயல்பு; ஒற்றுமையும் ஒத்துழைப்பும் குறைவாயிருப்பது அதைக் காட்டிலும் இயல்பானது.

இத்தகைய இயல்புகள் படைத்த நிக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி நகரத்துக்கு ஏழை எழுத்தாளர் ஸ்ரீ ப. ராமசாமி முனிசிபல் சேர்மன் ஆனது வியப்பான விஷயமே அல்லவா!

அடுத்த முறை ஸ்ரீ ப. ராமஸ்வாமி சென்னைக்குத் திருநெல்வேலி சேர்மனாக விஜயம் செய்த போது சென்னை எழுத்தாளர்கள் உட்லண்ட்ஸ் ஹோட்டலில் அவருக்கு ஒரு உபசார விருந்து நடத்தினார்கள்.

ஆனால் இந்தச் 'சேர்மன்' பதவியில் எத்தனை நாள் அவர் நீடித்திருக்கப் போகிறார் என்ற சந்தேகம் பலருக்கு இருந்தது. சிலர் ஆறு மாதமும் சிலர் ஒன்பது மாதமும் கெடு வைத்தார்கள். கெடு வைத்தவர்களுக்கெல்லாம் டிமிக்கி கொடுத்து விட்டு ஸ்ரீ ப. ரா. சென்ற ஐந்து வருஷங்களாகத் திருநெல்வேலி சேர்மன் வேலை பார்த்து வருகிறார். நகரமும் நாடும் பாராட்டும் படியாக முனிசிபல் நிர்வாகம் நடத்தி வருகிறார்.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் ஸ்ரீ ப. ரா. வின் முயற்சியினால் திருநெல்வேலி நகரசபையின் ஆதரவில் பொருட் காட்சி ஒன்று நடைபெற்றது. சென்ற வருஷத்திலும் நடந்தது. இரண்டு வருஷத்துக் கண்காட்சியிலும் பணம் மிச்சமாயிற்று. மிச்சமான பணத்தைக் கொண்டு திருநெல்வேலியில் பிரஸவ ஆஸ்பத்திரி ஒன்று நிறுவத் தீர்மானித்தார்கள். தீர்மானித்ததோடு நிற்கவில்லை. கட்டிடம் கட்ட ஆரம்பித்துப் பாதிக் கட்டிடம் கட்டியாகி விட்டது. இந்த வருஷத்திலும் பொருட்காட்சி நடத்தி மிச்சமாகும் பணத்தைக் கொண்டு கட்டிடத்தைப் பூர்த்தி செய்துவிடலாமென்பது ஸ்ரீ ப. ரா.வின் ஆசை.

இந்த மூன்றாவது வருஷப் பொருட்காட்சி வைபவத்தை ஆரம்பித்து வைப்பதற்குத்தான் ராஜாஜியை அழைத்தார்கள். பொருட் காட்சி ஆரம்பித்தல், அஸ்திவாரக் கல் நாட்டுதல் முதலிய காரியங்களில் ராஜாஜிக்கு அவ்வளவாக உற்சாகம் கிடையாது. எத்தனையோ அழைப்புக்களை நிராகரித்திருக்கிறார். திருநெல்வேலி விஷயத்தில் விதிவிலக்குச் செய்து ஒப்புக் கொண்டார்.

அதற்கேற்ப, ஆரம்ப வைபவமும் அமோகமாக நடந்தது. கவிமணி அவர்களின் 'பாடல் பெற்ற' வைபவமாகவே நடந்தது என்றால் வேறு என்ன பெருமை அதற்கு வேண்டும்!

பொருட் காட்சி வைபவத் திறப்பு விழாவுக்கு ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை நாலு அருமையான பாடல்களைப் பாடி அனுப்பி யிருந்தார். அப்பாடல்கள் திறப்புவிழா வைபவத்தில் இசையுடன் பாடப்பட்டன. முதல் பாடல், விழாவை ஆரம்பித்து வைத்த தலைவருக்கு வாழ்த்து:—

"தந்திரிக்குத் தந்திரியாய்
தாசனுக்குத் தாசனாய்
மந்திரிகள் மெச்சு மதி
மந்திரியாய்—வந்துதித்த
இன்னருட் செல்வா!
இராஜகோபாலா! நீ
மன்னுலகில் வாழ்க
மகிழ்ந்து!"

அடுத்தபடியாக நெல்லை நகரத்தையும், பிறகு நெல்லை நகர சபையையும் வாழ்த்திவிட்டுக் கவிமணி சபைத் தலைவருக்கு வரும்போது, எப்படிப் பாடல் அருவியாகப் பொழிகிறது பாருங்கள்:—

"அல்லும் பகலும் உழைத்திடுவோன்
அன்பு கனிந்த உரை தருவோன்
நெல்லைநகர சபைத் தலைவன்
நேர்மை காணும் நெறியுடையோன்
நல்லன் நல்லா ரெல்லார்க்கும்
நண்பன் ராமசாமி நிதம்
முல்லை முதல்வன் துழாய் மார்பன்
முருகன் அருளால் வாழியவே!"

இதை இரண்டு சிறு குழந்தைகள் இனிமையாகப் பாடக் கேட்டபோது, எழுத்தாளர் ப. ரா. வைக் குறித்து நாம் அறிந்திராத உண்மைகள் எல்லாம் கவி மணிக்கு எப்படித் தெரிந்தன என்று அதிசயித்தேன். கவிஞர்களின் அகக்கண் நோக்கு என்பது இதுதான் போலும்.



"அதோ வந்து விட்டார்!"

கவி மணியிடமாவது பாடல் பெற்றுவிடலாம். ராஜாஜியிடம் நல்ல பெயர் வாங்குவ தென்பது அவ்வளவு எளிய காரியமன்று. திருநெல்வேலியிலிருந்து திரும்பிவரும்போது ராஜாஜி "நல்ல ஊழியர் என்றால், இப்படியல்லவா உள்ளூரில் பொது நல ஊழியம் செய்து நல்ல பெயர் எடுக்க வேண்டும்!" என்று இரண்டு மூன்று தடவை சொல்லி அதிசயித்தார்.

"பத்திரிகையாளர் எல்லாரும் பிறரைக் குற்றம் சொல்லிக் கொண்டிருப்பதை விட்டு விட்டு, இம்மாதிரி உருப்படியான தொண்டில் ஈடுபட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!" என்று குறிப்பாகவும் ஒரு தடவை சொன்னார். அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதது போல் விட்டு விட்டேன்!

ராஜாஜியும் தமது பொது வாழ்க்கையைச் சேலம் நகர சபையின் திறமை வாய்ந்த தலைவராக இருந்துதான் ஆரம்பித்தார் என்பது எனக்கு அப்போது நினைவு வந்தது. பார்க்கப்போனால், ராஜாஜியைக்கூட எழுத்தாளர் "ச. ரா." என்று குறிப்பிடலாம் அல்லவா!

ஆனால் ராஜாஜி அந்தச் சமயத்தில் சமூக ஆசாரங்களுக்கு விரோதமான சில சீர்திருத்தங்களைச் செய்து பெரும் எதிர்ப்புகளுக்கும் கண்டனங்களுக்கும் சாதி பகிஷ்காரத்துக்கும் கூட உள்ளாக நேர்ந்தது. ஸ்ரீ ப. ரா. வுக்கு அந்தமாதிரி தொல்லைகள் இப்போது இல்லை. அவருடன் திருநெல்வேலியின் பிரமுகர்கள் பலர் போட்டியிட்டு ஒத்துழைப்பதைப் பார்த்தேன். ஸ்ரீ எஸ். பி. சிவசுப்பிரமணிய நாடார், ஸ்ரீ சங்கரசுப்பிரமணிய முதலியார், ஸ்ரீ எஸ். என். சோமயாஜுலு முதலியவர்கள் பொருட் காட்சி விஷயத்தில் முன்னின்று எல்லாக் காரியங்களையும் செய்து ஸ்ரீ ப. ரா. வின் பளுவை வெகுவாகக் குறைத்துக் கொண்டிருந்தார்கள். எனக்குத் தெரிந்தவர்கள் இவர்கள். மற்றும் நகரசபை அங்கத்தினர்கள், உத்தியோகஸ்தர்கள், தொண்டர்கள் நூற்றுக்கணக்கானவர்கள் ஒத்துழைத்து வேலை செய்துதான் அத்தகைய பொருட் காட்சியை வெற்றிகரமாக நடத்தி வைக்க முடியும் அல்லவா! ஸ்ரீ ப. ரா. வெற்றியின் இரகசியம் இதுதான் என்று தெரிந்து கொண்டேன். சிலர் மற்ற எல்லா ஆற்றல்களும் நேர்மையும் உள்ளவர்களாயிருப்பார்கள். ஆனால் எளிதில் பிறருடன் சண்டையிட்டுக் கொள்வார்கள். நாலு பேருடன் ஒத்துழைத்துக் காரியம் செய்ய முடியாது. நீடித்த காலம் யாருடனும் சிநேகமாக இருக்கவும் இயலாது.

"தொழில்—
பண்ணப் பெரு நிதியம் வேண்டும்—அதில்
பல்லோர் கூட்டுறவு வேண்டும்"

என்று பாடினார் பாரதியார்.

கோவில்பட்டி திருநெல்வேலிச் சாலையில் சங்கரபுரம் சந்திப்பில். வரவேற்பு உபசாரம்



யானையும் அஞ்சலி செய்கிறது

தொழில் செய்வதற்கும் சரி, பொதுத் தொண்டு செய்வதற்கும் சரி, பெரு நிதியைக் காட்டிலும் பல்லோர் கூட்டுறவு மிகவும் அவசியம். இதைப் பெறும் சக்தி ஸ்ரீ ப. ரா. விடம் அபாரமா யிருக்கிறது. ஆகையால் எடுத்த பணியைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய நிதியும் போதிய அளவு கிடைத்து விடும் என்பது நிச்சயம்.

இதற்கு அறிகுறி பொருட்காட்சி வைபவத்திலேயே வெளியாயிற்று. ஒரு பெண்மணி குழந்தையுடன் மேடைக்கு வந்து வெற்றிலைப் பாக்கும் பழமும் வைத்திருந்த தட்டு ஒன்றை ராஜாஜியிடம் சமர்ப்பித்தார். அதை ராஜாஜியும் முக மலர்ச்சியுடன் வாங்கிக் கொண்டு ஸ்ரீ ப. ரா.விடம் சேர்ப்பித்தார். வெறும் வெற்றிலைப் பாக்குத் தட்டுக்கு இவ்வளவு பந்தோபஸ்து என்ன என்று யோசித்தேன். அப்புறம் தெரிந்தது, அதில் ரூபாய் 2001 ரொக்கமும் இருந்தது என்று. ஸ்ரீ ப. ரா. கட்டத் தொடங்கியிருக்கும் பிரசவ ஆஸ்பத்திரி நிதிக்கு இது நன்கொடை என்று அறிந்தேன். இது போலவே வேண்டிய பணம் வந்து குவிந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. அன்று அங்கே கூடியிருந்த சபையின் தோற்றமும் அதை உறுதிப் படுத்திற்று. திருநெல்வேலி ஜில்லாவையும் திருநெல்வேலி நகரையும் சேர்ந்த பிரமுகர்கள் அத்தனை பேரும் பொருட் காட்சித் திறப்பு விழாக் கூட்டத்தில் வீற்றிருக்கக் கண்டேன். பொறுக்கி எடுத்த அறிவாளிகளும் தேச பக்தர்களும் அந்த மகா சபையில் தரிசனம் அளித்தார்கள். பின் ஸ்ரீ ப. ரா.வின் மனோரதம் கட்டாயம் நிறைவேறியே தீரும் என்று சொல்லவும் வேண்டுமா !

விரைவிலேயே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை மறுபடியும் கவி பாடும்படியான அவசியம் நேரிடும் என்பதில் ஐயமில்லை. பிரசவ ஆஸ்பத்திரியின் திறப்பு விழாவிற்கு அவர்களுடைய பாடல்கள் அவசியம் வந்தாக வேண்டும். அந்தப் பிரசவ விடுதியில் பிறக்கப்போகும் குழந்தைகள் பல்லாண்டு பல்லாண்டு இந்த நாட்டின் நல்ல பிரஜைகளாக,—இல்லை, செங்கோல் மன்னர்களாக,—வாழும்படி கவிமணி அவர்கள் வாழ்த்துப் பாடல் பாடியே தீரவேண்டும்.

ராஜாஜி அவர்களும் பொருட் காட்சித் திறப்பு விழாவில் மேற்கண்ட கருத்தை ஒரு புதிய கோணத்தில் வற்புறுத்தி விளக்கிக் கூறினார்கள்.

வழியில் ஒரு நிகழ்ச்சி : ராஜாஜி சிறுவர் சிறுமிகளுக்குப் பூமாலைகளை வழங்குகிறார்.





நீண்ட அகன்ற விசாலமான வரவேற்புப் பந்திரங்களை அளித்த
நகரசபை—ஜில்லா போர்டு தலைவர்கள்

"பாரதியார் 'நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்று பாடினார். இதிலிருந்து 'நாம் ஒவ்வொருவரும் இந்நாட்டு மன்னர்' என்று தவறாக அர்த்தம் செய்துகொண்டு அவரவர்களும் தத்தம் இஷ்டம்போல் நடக்க ஆரம்பித்தால் விபரீதம்தான் நேரிடும்; பெற்ற சுதந்திரம் பறிபோய் விடும். நாம் தனித் தனியாக மன்னர்கள் அல்ல; வெறும் ஆள்கள்தான். **எல்லோரும் சேர்ந்தால்தான் மன்னர்கள்.** எல்லோரும் சேர்ந்து சட்டங்களைச் செய்து, எல்லோரும் அந்தச் சட்டங்களுக்கு உட்பட்டு நடந்து, எல்லோரும் சேர்ந்து ஒத்துழைத்து, எல்லோரும் யோக்கியமாகப் பொது நலத்துக்காகப் பாடு பட்டால்தான் மன்னர்களாயிருப்போம். இல்லாவிட்டால், பழையபடி அடிமைகளாகி விடுவோம்" என்று கூறினார்கள்.

"**எல்லோரும் இந்நாட்டு மன்னர்**' என்னும் பாரதியார் வாக்குக்கு, "**எல்லோரும் சேர்ந்தால்தான் மன்னர்கள்**" என்ற இத்தகைய வியாக்கியானத்தை அதுவரை நான் கேட்டது கிடையாது. இலக்கிய மகா ரஸிகர்கள் அடங்கிய அந்தச் சபையோரும் கேட்டதில்லை யென்று அவர்களுடைய முகபாவங்களில் காணப்பட்ட வியப்பிலிருந்து தெரிந்தது.

ராஜாஜிக்கு அதிக சிரமம் கொடுக்கக் கூடாதென்பதற்காக நிகழ்ச்சிகளை யெல்லாம் மிகச் சுருக்கமாகவே ஏற்படுத்தி யிருந்தார்கள். பொருட்காட்சித் திறப்பு நிகழ்ச்சியும் சீக்கிரமாக நடந்து முடிந்தது. இவ்வளவு நல்ல சபையை, பெரிய சபையை, இன்னொரு நல்ல காரியத்துக்கும் உபயோகித்துக் கொள்ளலாம் என்று கருதி ஜில்லா கலெக்டர் திருநெல்வேலி ஜில்லாவில் அதிக விளைவுப் போட்டியில் வெற்றி யடைந்தவர்களின் ஜாபிதாவைப் படித்தார். வெற்றி யடைந்தவர்களின் சாதனைகளையும் அவர்கள் கையாண்ட முறைகளையும் சுருக்கமாக எடுத்துக் கூறினார். புள்ளி விவரங்கள் 'கோட்டைகள், மணங்குகள், பவுண்டுகள்' என்று இருந்தபடியால் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் உணவுக் கண்ட்ரோல் நீங்கிவிட்ட விஷயத்தை அது மறுபடி நினைவூட்டிற்று. "விளைவு அதிகமாக ஆக, அதிகாரிகளின் கெடுபிடி தொந்தரவுகள் அதிகமாகும்" என்ற பயமின்றி இனிமேல் விவசாயிகள் விளைச்சலைப் பெருக்குவதில் ஈடுபடலாம் அல்லவா!—இந்த விஷயம் மறுபடியும் திருநெல்வேலியில் நான் கண்ட பொது மக்களின் உற்சாக வெள்ளத்தை நினைவுக்குக் கொண்டு வருகிறது.

மகாத்மா காந்தி அல்லது ஜவாஹர்லால் நேருஜி சென்னை நகர் வீதி வழியாக வருகிறார் என்றால், சென்னை வீதிகளில் இருபுறமும் ஜனங்கள் கூடி நிற்பதை நம்மில் பலர் பார்த்திருக்கிறோம். அதற்கும் ஒரு படி அதிகமான உற்சாகமுள்ள ஜனத்திரள்களைத் திருநெல்வேலிச் சாலைகளில் இம்முறை ராஜாஜி விஜயத்தின் போது பார்க்க முடிந்தது என்று சொல்வது மிகையாகாது.

பாளையங் கோட்டையில் ராஜாஜி தங்கியிருந்த சர்க்கார் விடுதியிலிருந்து திருநெல்வேலி நகரத்துக்குப் போக ஒரே ஒரு சாலைதான் உண்டு. ராஜாஜியின் அலுவல்கள் பெரும்பாலும் திருநெல்வேலியில்தான். மொத்தம் நாலு தடவை அந்தச் சாலை வழியாகப் போய் வர நேர்ந்தது. நகரத்துக்குள் வந்தது ஒன்று, ரயில் நிலையத்துக்குப் போனது ஒன்று ஆக மொத்தம் பத்து தடவை ஒரே சாலை வழியாக இருபத்து நாலு மணி நேரத்தில் குறுக்கும் நெடுக்கும் போகும்படி இருந்தது. இந்தப் பத்து தடவையும் குறிப்பிட்ட அச்சாலைகளில் இருபுறமும் ஜனங்கள் சுவர் வைத்தது போல், (ஜனங்களைச் 'சுவர்' என்று சொன்னதாக யாராவது சண்டைக்கு வரப்போகிறார்கள்) இல்லை, கொலுவைத்தது போல், (இதுவும் ஆபத்துதான்; ஜனங்களைப் பொம்மைகள் என்று சொன்னதாகச் சண்டைக்கு வரக்கூடும்) இல்லை, ஜனங்களை வரிசை வரிசையாக நிறுத்தி வைத்தது போல் ஜனத்திரள்கள் நின்று கொண்டிருந்தன. ராஜாஜியின் வண்டி நெருங்கி விட்டதும் கல கல வென்ற கரகோஷமும் 'வாழ்க' கோஷமும், முழுப் பட்டாசுக் கட்டில் தீ வைத்ததும் நெடுகிலும் வெடித்துக் கொண்டு போவது போல், பரவிச் சென்று கொண்டிருந்தது! (பட்டாசு உதாரணத்திலும் ஏதாவது ஆபத்து இருக்கிறதா என்று தெரியவில்லை. உதாரணங்களை மொத்தத்தில் கைவிட்டு விடுவதே க்ஷேமம் என்று தோன்றுகிறது. உதாரணங்களினால் வரும் ஆபத்

தைப் பற்றிப் பின்னால் இக்கட்டுரையில் மறுபடியும் சொல்ல வேண்டியதா யிருக்கும்.)

இத்தகைய பொதுஜன உற்சாகம் உச்ச நிலையை அடைந்திருந்தது இரண்டு இடங்களில்.

ஒன்று, திருநெல்வேலிச் சாலையில் தாழையூத்து என்னும் சங்கரபுரம் சந்திப்பில். 'சங்கரபுரம்' என்பது, ஸ்ரீ எஸ். என். என். சங்கரலிங்கய்யர் காரணமாக ஏற்பட்டது என்று அறிந்தேன். ஸ்ரீ சங்கரலிங்கய்யர் தமிழ் நாட்டின் பெரிய பரோபகாரிகளில் ஒருவர். தான தர்மம் கொடுக்கும் 'பரோபகாரி'களை நான் குறிப்பிடவில்லை. தமிழ் நாட்டின் பொருள் வளத்துக்கும் தொழில் வளத்துக்கும் அடிகோலும் பரோபகாரத் தன்மையைத்தான் குறிப்பிடுகிறேன். "இண்டோ கமர்ஷியல் பாங்கி" என்னும் ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, அதன் ஆரம்ப கால சோதனைகளை யெல்லாம் தாங்கி, இன்று அசைக்க முடியாத அடிப்படையில், தேசத்தின் பெரிய பாங்கிகளில் ஒன்றாகச் செய்தவர். திருநெல்வேலிக்குப் பக்கத்தில் ஸ்ரீ சங்கரலிங்கய்யர் பெரிய அளவில் செமண்ட் தொழிற்சாலை ஒன்று ஸ்தாபனம் செய்யப் போவதாகப் பத்திரிகைகளில் சில வருஷங்களுக்கு முன் செய்தி வெளியாகி யிருந்தது. அதைக் குறித்துப் பின்னர் நான் விவரங்களைத் தெரிந்து கொள்ளவில்லை. செமண்ட் பஞ்சத்தைப் பற்றிப் பேச்சு வரும்போதெல்லாம் மட்டும் "சங்கரலிங்கய்யர் செமண்ட் சீக்கிரம் வரக்கூடாதோ!" என்ற நினைவு தோன்றும். ஆன்றும், திருநெல்வேலிக் கருகில் வெறும் பொட்டைக் காடாகக் கிடந்த பூமியை அவருடைய குமாரர்கள் சீர்திருத்தி வளப்படுத்திப் பயிர் செய்து பாதாளத்திலிருந்து தண்ணீர் கொண்டு வந்து பாய்ச்சிக் கிளி கொஞ்சும் பண்ணையாகச் செய்திருக்கிறார்கள் என்றும் கேள்விப்பட்டிருந்தேன். இப்போது சங்கரபுரம் என்னுமிடத்தில் ராஜாஜியின் கார் நின்றபோது அங்கே தான் ஸ்ரீ சங்கரலிங்கய்யரின் செமண்ட் தொழிற்சாலை விஸ்தாரமான அளவில் கட்டி வேலையும் நடந்து வருகிறது என்று அறிந்து மகிழ்ச்சி உண்டாயிற்று. அந்தச் சங்கரபுரம் சந்திப்பில், சாலையில் பெருங் கூட்டம் கூடி ராஜாஜிக்குப் பிரமாதமான வரவேற்பு அளிக்க ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. வண்டியும் நின்றது. ஆனால் ஸ்ரீ எஸ். என். என். சங்கரலிங்கய்யர் அவர்களே நடக்க முடியாமல் நடந்து அங்கே சாலையில் வந்து நிற்பார் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவருடைய 'பாரி'யான தேகத்தைப் போலவே பெரிய உள்ளமும் படைத்தவராதலால் உற்சாகம் தாங்க முடியாமல் ராஜாஜியின் வரவேற்பு வைபவத்தில் கலந்து கொள்ள வந்து விட்டார். ராஜாஜியும் சாலையில் பேசவில்லை என்ற விதிக்கு மாறாக, சில வார்த்தைகள் அங்கே பேசிவிட்டுப் புறப்பட்டார்.

அடுத்தபடியாக, பொருட்காட்சி திறக்கப் போகும்போது கோயிலைச் சுற்றியுள்ள நாலு வீதிகளிலும் கூடியிருந்த கூட்டங்களைச் சொல்ல வேண்டும். அந்தக் கூட்டங்களின் அபரிமிதமான உற்சாக வெள்ளம் ராஜாஜியை மூச்சுத் திணறும்படி செய்திருக்க வேண்டும். ஏனெனில், அது வரையில் புகார் ஒன்றும் சொல்லாதிருந்தவர் "இதெல்லாம் சோமயாஜுலுவின் வேலை. இப்படியெல்லாம் முன்னேற்பாடு செய்து வைத்திருக்கிறார்" என்று குறை சொல்லத் தொடங்கினார். ஸ்ரீ சோமயாஜுலு "இல்லை, இல்லை; இல்லவே இல்லை!" என்று சாதித்து வந்தார்.

என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், ஸ்ரீ சோமயாஜுலுவின் தலையில் முழுப் பொறுப்பையும் சுமத்த முடியாது. ஜனங்களின் உற்சாகத்தை அவர் சிருஷ்டித்திருக்க முடியாது; அவ்வளவு ஜனங்களை அவர் கொண்டு வந்து

ஸ்தல ஸ்தாபனங்களின் வரவேற்பு உபசாரம்: சபையில் ஒரு பகுதி





திருநெல்வேலிப் பொதுக் கூட்டத்தில் ராஜாஜி பேசுகிறார். பின்னால் ஸ்ரீ எஸ். பி. சுப்பிரமணிய நாடாரும் ஸ்ரீ கரையாளரும்

சாலைகளில் நிறுத்தி யிருக்கவும் முடியாது. திருநெல்வேலி மக்களில் முக்கால் வாசிப்பேரை தினம் அதிகாலையில் தாமிரபரணி நதியில் குளித்துக் கொண்டிருக்கக் காணலாம். பொழுது விடிந்து சூரியன் உதயமாவதே காலையில் தாமிரபரணியில் ஸ்நானம் செய்வதற்குத்தான் என்பது திருநெல்வேலியாரின் அசையா நம்பிக்கை. இல்லாவிட்டால் சூரியன் எதற்காக உதயமாகிறான்! அப்படி உதயமானாலும் தாமிரபரணியில் குளிக்காவிட்டால் இவ்வளவு சுத்தமாக அவன் எப்படி இருக்க முடியும்!— இத்தகைய நம்பிக்கை உள்ளவர்களைக் காலை எட்டு மணிக்குக் கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் நிரல் நிரலாகக் கொண்டு வந்து நிறுத்துவதென்றால், அது ஸ்ரீ சோமயாஜுலுவினால் கூட முடியாத காரியந்தான்.

ஸ்ரீ ப. ராமசாமியைப்போல் ஸ்ரீ எஸ். என். சோமயாஜுலு மற்றொரு ஏழைத் தொண்டர். அவரைத் திருநெல்வேலி நகரமும் கிராமங்களும் தங்கள் பிரதிநிதியாகச் சென்னைச் சட்டசபைக்கு அனுப்பியிருக்கின்றன. அவரைக் காங்கிரஸ் அபேட்சகராக எடுக்கும் விஷயம் கடைசி வரையில் சந்தேகமாயிருந்தது. அவரிடம் பணம் இல்லை என்பதுதான் காரணம். அவருடன் சேர்ந்து நின்ற ஹரிஜனப் பிரதிநிதி ஸ்ரீ ஆறுமுகம் அவர்களிடமும் பணம் கிடையாது. எப்படியோ இருவரும் சேர்ந்து நின்று ஒத்துழைத்து வேலை செய்தார்கள். திருநெல்வேலியின் பெரிய பணக்காரர்களில் சிலர் "சோமயாஜுலு ஜயித்தால் நாங்கள் இந்த ஊரைவிட்டே போய் விடுகிறோம்" என்று சபதம் கூறினார்களாம். அவர்கள் ஊரை விட்டுப் போகவில்லை; போக வேண்டிய அவசியமும் இல்லை. ஸ்ரீ சோமயாஜுலு இன்று ஏழைகள், பணக்காரர்கள், உழைப்பாளிகள், பண்ணையார்கள் எல்லாருக்குமே தான் பிரதிநிதியாக விளங்கி வருகிறார்.

தேர்தல் பிரசாரத்தின்போது ஜனங்களுக்கு ஸ்ரீ சோமயாஜுலு "நான் அதைச் சாதித்து விடுகிறேன்; இதைச் சாதித்து விடுகிறேன்" என்றெல்லாம் பிரசாரம் செய்யவில்லை. "இதுவரையில் செய்து வந்ததுபோல் என்னாலியன்ற தொண்டைச் செய்து வருவேன்" என்றுதான் கூறி வந்தார். மந்திரிகள் ஒருவர் பின் ஒருவராகத் தோற்று வந்த செய்திகள் வந்தபோது அவர்பாடு திணறிப் போய் விட்டது. திருநெல்வேலி ஜில்லாவில்தான் கடைசி கடைசியாகத் தேர்தல். காங்கிரஸ் மந்திரிகளின் தோல்வியைப்பற்றி எதிரிகள்

திருநெல்வேலி மாபெரும் பொதுக் கூட்டத்தில் ஒரு சிறிய பகுதி



ன்னுராம் கொட்டி வந்தபோது, பாவம், ஸ்ரீ சோமயாஜுலு என்ன சொல்வார்! சொல்வதற்குச் சரியான யோசனை ஒன்று தோன்றியது; 'மூளை அலை' (Brain Wave) என்று இங்கிலீஷில் சொல்வார்களே, அந்தமாதிரி.

"வாஸ்தவந்தான்; ஸ்ரீ குமாரசாமி ராஜாவும் பக்தவத்ஸலமும் தோற்றுப் போனார்கள். அதனால் என்ன! இந்த ஏழை சோமயாஜுலு மந்திரி வேலை பார்ப்பதற்கு ஒரு வாய்ப்பு இப்போது கிடைத்திருக்கிறது! உங்களுக்கு நான் தோட்டியாகவும், மந்திரியாகவும் தொண்டு செய்வேன். வோட்டை மட்டும் எனக்குக் கொடுங்கள்!" என்றாராம்.

திருநெல்வேலிக்காரர்களும் அவரை நம்பி வோட்டைக் கொடுத்து விட்டார்கள். ஒரு வேளை "நமது சோமயாஜுலு மந்திரியாகத் திரும்பி வருவாரோ!" என்று அவர்களில் பலர் எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் அம்மாதிரி நடைபெறவில்லை. இத்தனை பழைய மந்திரிகள் வராமற் போயிருந்தும் சோமயாஜுலுவுக்கு மந்திரி வேலை கிடைக்கவில்லை! போனால் போகட்டும்!

"மந்திரிகள் மெச்சும் மதி மந்திரியான முதன் மந்திரி ராஜாஜிக்குப் பக்கத்தில் ஒரு நாள் காரில் உட்கார்ந்து போகும் பாக்கியமாவது நமது பிரதிநிதிக்குக் கிடைத்ததே" என்று திருநெல்வேலிக்காரர்கள் சந்தோஷப்படட்டும் என்பதாக ஸ்ரீ சோமயாஜுலு எண்ணியிருக்கலாம். அப்படிப் பார்க்கும் சந்தோஷத்தை ஜனங்கள் எல்லாரும் அடைய வேண்டும் என்றும் அவர் ஆசைப்பட்டிருக்கலாம். அதற்காக, இன்னின்ன சாலை வழியாகச் சுமார் இன்னின்ன நேரத்தில் ராஜாஜியின் கார் போகும் என்பதை அவர் முன்னாடியே ஜனங்களுக்குத் தெரியப்படுத்தியிருக்கக் கூடும்! மோட்டார் வண்டி ஓட்டும் நண்பரிடம் சற்றுக் காதோடு "அங்கங்கே, ஜனக் கூட்டம் நிற்கும் இடங்களில், கொஞ்சம் இழுத்துப் பிடித்து, பவனி விடுவது போலவும், ஆனால் ஊர்வலம் மாதிரி ஆகிவிடாமலும், இலேசாக மெள்ள மெள்ள வண்டியை ஓட்டுங்கள்!" என்று சொல்லியிருக்கக் கூடும்!

அவ்வளவுதான்; இதற்கு மேல் ஸ்ரீ சோமயாஜுலுவின் பேரில் அதிகமாகப் புகார் சொல்லுவதற்கு நான் தயாராயில்லை.

* * *

திருநெல்வேலித் திருவிழாவைப் பற்றி இன்னும் எழுதுவதற்கு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. இந்தக் காகித கிராக்கி காலத்தில் அதற்கெல்லாம் இடம் ஏது! இரண்டு முக்கிய நிகழ்ச்சிகளை மட்டும் குறிப்பிட்டு முடிக்கிறேன். ஜில்லா போர்டு, பாளையங்கோட்டை நகரசபை, மேலப்பாளையம் நகரசபை ஆகிய மூன்று ஸ்தாபனங்களும் அளித்த வரவேற்புப் பத்திரங்கள் அகலத்திலும், நீளத்திலும் உயரத்திலும், வார்த்தைகளிலும், புகழுரைகளிலும், கோரிக்கைகளிலும் பிரம்மாண்டமாயிருந்தன என்பது மிகையாகாது. மேலப்பாளையம் சேர்மன் வி. எஸ். டி. இப்ராஹிம் சாகிபு அவர்களின் கம்பீரமான தோற்றத்தைக் கூட ஒவ்வொரு பத்திரமும் மறைத்து விடும்படி விசாலமாயிருந்தன என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

"அப்படிப்பட்ட கலியுக நரகாசுரனாகிய உணவுக் கண்ட்ரோல் ராட்சதனையே ஒழித்து விட்டீர்கள். அதற்காகத் தங்களை வாழ்த்துகிறோம். அது போலவே எங்களுடைய மற்றக் குறைகளையும் தீர்த்து வைக்கக் கோருகிறோம்!" என்பதாக ஒன்று, இரண்டு, இருபது, முப்பது என்று குறைகளின் ஜாபிதாக்கள் கொடுக்கப்பட்டிருந்தன.

"மேலப் பாளையத்துக்கும் திருநெல்வேலிக்கும் நடுவில் உள்ள ரயில்வே கேட் அடிக்கடி சாத்தப்பட்டிருப்பது பெரிய இடைஞ்சலாயிருக்கிறபடியால், அவ்விடத்துக்கு ஒரு ஸ்பெஷல் உத்தியோகஸ்தரை நியமித்து இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் கேட் திறந்து வைக்கும்படி ஏற்பாடு செய்வதுடன், அந்தத் திறப்பு விழாவையும் தாங்களே வந்திருந்து நடத்திக் கொடுக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறோம்!—உணவுக் கண்ட்

திருநெல்வேலி பொதுக் கூட்டத்தில் பெண்கள் வீற்றிருந்த பகுதி



ரோகே ஒழித்த தங்களுக்கு இது ஒரு பிரமாத காரியமாகுமா!'' என்னும் முறையில் பல கோரிக்கைகள் இருந்தன.

ஒரு மனிதரிடத்தில் நம்பிக்கை வைப்பதென்றால், இப்படி யல்லவா பரிபூரணமாக வைக்க வேண்டும்! அரைகுறையாக நம்பிக்கை வைப்பதில் என்ன பிரயோஜனம்!

* * *

இன்னும் சொல்ல வேண்டியது மாலையில் நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தைப் பற்றித்தான். கூட்டத்திலிருந்தவர்களை ஐம்பதினாயிரத்திலிருந்து எண்பதினாயிரம் வரையில் பலரும் மதிப்பிட்டார்கள். தலைகளை எண்ணிக் கணக்குப் பண்ணலாம் என்று முயன்று, முடியாமல் நான் கைவிட்டு விட்டேன். அதுவரையில் திருநெல்வேலியில் நடந்த எந்தப் பொதுக் கூட்டத்துக்கும் பெண்மணிகள் அவ்வளவு பேர் வந்ததில்லையென்று மட்டும் எல்லாரும் ஒப்புக் கொண்டார்கள். பெண்மணிகள் பத்தாயிரம் பேர் இருக்கலாம் என்பது என்னுடைய மதிப்பு. அவர்களில் அநேகம் பேர் ராஜாஜி அவர்கள் பக்கமாக வந்தபோது இரு கரங்களையும் கூப்பிக் கும்பிட்டார்கள். அந்தக் கரங்கள் பலவற்றில் பொன் வளையல்கள் இருப்பதைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டுப் போனேன்! ''இந்த ராஜாஜி ஸ்திரீகளின் நகைகளைச் சர்க்கார் வரிகளுக்காகக் கேட்பவராயிற்றே! பெண்களைத் துரத்திப் போய் நகைகளை அபகரிப்பதாகக்கூடப் படம் போட்டுப் பிரசாரம் செய்திருக்கிறார்களாமே! இந்தச் சகோதரிமார்கள் இவ்வளவு தைரியமாக ஆபரணங்களை அணிந்து பொதுக் கூட்டத்துக்கு வந்திருக்கிறார்களே!'' என்றுதான் பயந்தேன். அந்தப் பெண்மணிகளுக்கு அப்படி யொன்றும் பயமிருந்ததாகத் தெரியவில்லை. ''ரேஷனை எடுத்த மகானைக் கை எடுத்துக் கும்பிட்டுப் போவோம்!'' என்று அவர்கள் வெகு உற்சாகத்துடன் வந்திருந்ததாகவே தோன்றியது.

பொதுக் கூட்டத்தில் அன்று ராஜாஜி முக்கியமாகப் பேசிய விஷயங்கள் ஆண்டவனைப் பற்றியும் ஸ்ரீ ஈ. வே. ராமசாமிப் பெரியாரைப் பற்றியுந்தான். அடுத்தபடி கழுதை, பசு இவற்றைக் குறித்தும் பேசினார்கள். விஷயங்கள் எப்படிக் கோவையாகச் சேர்ந்தன பாருங்கள்!

பிரசங்கத்தில் பெரும் பகுதியை ஆண்டவன் அபகரித்துக் கொண்டான். அடுத்தபடியாக, ஸ்ரீ ஈ. வே. ரா. வந்தார். பெரியாரிடம் ராஜாஜிக்கு எப்போதும் ஒரு தனி மதிப்பு உண்டு. ''என்ன இருந்தாலும் தைரியசாலி என்றால் நாயக்கர்தான். மற்றவர்கள் சமயத்தில் பயந்து விடுகிறார்கள். 'நாங்களும் கடவுள் உண்டு என்றுதான் சொல்கிறோம்' என்கிறார்கள். நாயக்கர் மட்டும் 'நான் நாஸ்திகன்; நாஸ்திகப் பிரசாரந்தான் செய்யப் போகிறேன்!' என்று எவ்வளவு தைரியமாகச் சொல்கிறார்!'' என்று ஒரு சமயம் வியந்து கூறினார். அப்படிப் பட்டவருக்கு நாயக்கரிடம் ஒரு குறை இப்போது தோன்றிவிட்டது.

பொதுஜனங்களை ராஜாஜி கழுதைகள் என்று திட்டியதாகவும், பணக்காரர்களைப் பசுக்கள் என்று பாராட்டியதாகவும் நாயக்கர் அவருடைய பத்திரிகையில் எழுதி யிருந்தாராம். அதை யாரோ ஒரு நல்ல எண்ணக்காரர் மெனக்கெட்டுப் பத்திரிகையிலிருந்து கத்தரித்து எடுத்து ராஜாஜிக்கு அனுப்பி யிருந்தாராம்.

சாதாரணமாக இம்மாதிரி கண்டனங்களையும், இதைவிட மட்டரகமான வசைமாரிகளையும்கூட ராஜாஜி பொருட்படுத்துவதே யில்லை. ஆனால் மேற்குறிப்பிட்ட திரித்தல் கைங்கரியம் அவருடைய மனதை எப்படியோ அதிகமாகப் புண்படுத்திவிட்டதாகத் தோன்றியது.

''உதாரணத்துக்கு ஒரு விஷயத்தைச் சொன்னால், அதை இப்படியா மனமறிந்து திரித்துக் கூறுவது! இங்கிலீஷில் 'ஒட்டகத்தின் பேரில் கடைசி வைக்கோல்' என்று உதாரணம் கூறினால் அதை உபயோகித்து மனிதர்களை ஒட்டகங்கள் என்று சொன்னதாக யாராவது புகார் சொல்வார்களா!'' என்று ராஜாஜி கேட்டார்.



பொருட் காட்சியைத் திறக்க வந்து இறங்கும் ராஜாஜியை ஸ்ரீ சோமயாஜு*லுவும் ஸ்ரீ ப. ரா. வும் வரவேற்கிறார்கள்.

உதாரணங்கள் கூறுவதில் இம்மாதிரி அபாயங்கள் எப்போதும் இருக்கத்தான் இருக்கின்றன. அதிலும் கொஞ்சம் விடுதல், குறைத்தல், கூட்டல், திரித்தல் பண்ணினால் அபாயம் மிக அதிகம். கழுதை உதாரணத்தையே பார்க்கலாம்.

''கழுதையின் முதுகில் கூடத் தாங்கக்கூடிய அளவுக்கு மேல் சுமை ஏற்ற மாட்டார்களே! மனிதர்கள் பேரில் தாங்கும் அளவுக்கு மேல் வரியைச் சுமத்துவார்களா!'' என்பதில், ''கூட'' என்னும் இரண்டு எழுத்தை விட்டு விட்டால், படிப்பதற்குக் கொஞ்சம் விரஸமா யிருக்கும். ''கூட'' என்பது சேர்ந்திருந்தால், விரஸமாகவே தோன்றாது.

ராஜாஜியோ எழுதக்கூட இல்லை. பல்லாயிரம் மக்களுக்கு முன்னால் பேசி யிருக்கிறார். ''நீங்கள் கழுதைகள்'' என்று சொல்லி யிருந்தால், ஜனங்கள் சும்மா கேட்டுக்கொண்டு இருந்திருப்பார்களா!

தினம் பல பிரசங்கங்கள் செய்து வரும்போது, மேற்படி உதாரணத்தை எந்த ரூபத்தில் எங்கே சொன்னர் என்பது ராஜாஜிக்கே ஞிவிராது. பத்திரிகையில் அது எந்த ரூபத்தில் வந்தது என்பதையும் அவர் கவனித்திருக்க மாட்டார். திரித்து எடுத்துத் தனியாகக் காட்டிய பிறகு, "இப்படித் திரித்துக் கூறியிருக்கிறதே!" என்று வருத்தப் படுவது இயல்புதானே!

கழுதை உதாரணம் சொன்னது ஒரு இடத்தில்; பசு உதாரணம் கூறியது இன்னொரு இடத்தில், இன்னொரு சந்தர்ப்பத்தில்.

"பணக்காரர்களுக்கு அதிகமாக வரி போட வேண்டும் என்று சிலர் சொல்கிறார்கள். கட்டாயம் போட வேண்டியதுதான். பசுவுக்குத் தீனிபோட்டுத் தானே பாலைக் கறக்கவேண்டும்! அதுபோல் பணக்காரர்களைப் பணம் சம்பாதிக்க அநுமதித்தால்தானே அவர்களிடமிருந்து நிறைய வரி வசூலிக்கலாம்!" என்று ராஜாஜி சொன்னால் அது பணக்காரர்களை அவமதிப்பதும் ஆகாது; புகழ்வதும் ஆகாது. ஏதோ ஒரு உதாரணம் ஆகும்.



பிரசவ ஆஸ்பத்திரிக்கு ஓர் அன்னையின் நன்கொடை

ஆனால் பசுவைக் கழுதையுடன் சேர்த்துப் பிணைத்தால், தவறான அபிப்பிராயங்கள் ஏற்படலாம்.

உதாரணங்களினால் ஏற்படும் விபரீதத்தையும் உபயோகத்தையும் விளக்குமாற்றால் (விளக்கும்+ஆற்றல்) விளக்குவதற்கு இன்னொரு துடைப்பக் கட்டை உதாரணத்தையும் சொல்லி வைக்கிறேன். இதுவும் ராஜாஜி கூறிய உதாரணந்தான்.

முதன் மந்திரி உத்தியோகம் ஒப்புக்கொண்டவுடனே ராஜாஜி சென்னைக் கடற்கரையில் இரண்டு லட்சம் ஜனங்கள் அடங்கிய மாபெரும் கூட்டத்தில் பேசியபோது அந்தத் துடைப்பக் கட்டை உதாரணத்தைக் கூறினர்.

"வீட்டில் குப்பை கூளம் அதிகமாகச் சேர்ந்து விட்டால் துடைப்பக்கட்டையைத் தேடுகிறோம். பழைய துடைப்பமாயிருந்தாலும் எடுத்துக் கொண்டு பெருக்கித் தள்ளுகிறோம். அது போல இந்த மாகாண நிர்வாகத்தில் குப்பை அதிகம் சேர்ந்து விட்டபடியால் இந்தப் பழைய துடைப்பத்தை நீங்கள் கூப்பிட்டிருக்கிறீர்கள்!"

இவ்விதம் ராஜாஜி தம்மைத் தாமே துடைப்பத்துக்கு உதாரணமாகச் சொன்னபோது அதைக் கேட்டவர்கள் பலருடைய செவியில் காரசமாக விழுந்தது. பத்திரிகையில் படித்தவர்களுக்கும் மிக்க வருத்தம் அளித்தது.

ஆனால் ஒரு வேடிக்கையைக் கேளுங்கள்! உணவுக் கண்ட்ரோல் நீக்கிய மறுநாள் சென்னைக் கடற்கரைக்குப் போயிருந்தேன். ஜனங்கள் எல்லாரும் அதைப்பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். வயது முதிர்ந்த ஒரு பெண்மணி இன்னும் சில பெண்களிடம் இம்மாதிரி பேசிக் கொண்டு போனது என் காதில் விழுந்தது:—

"ராஜாஜி அன்றைக்குப் பொதுக் கூட்டத்தில் சொன்னாரே, உங்களுக்கு நினைவில்லையா? தன்னைத் துடைப்பக் கட்டை என்று சொல்லிக் கொண்டாரே! முதலில் இந்த ரேஷன் குப்பையைக் கூட்டித் தள்ளி விட்டார்! அந்த மகான் மட்டும் இன்னும் கொஞ்ச காலம் முதன் மந்திரி வேலையில் இருக்கட்டும், பார்த்துக் கொண்டேயிருங்கள், எல்லா அசுத்தங்களையும் அடியோடு பெருக்கித் தள்ளி விடுவார்! பகவான் அவருக்குத் தீர்க்காயுளை அளிக்க வேண்டும்!"

கடற்கரைச் சாலையோடு சென்ற மூதாட்டியின் இந்தப் பேச்சைக் கேட்ட பிறகுதான் உதாரணத்தின் உபயோகம் எனக்குத் தெரிய வந்தது. அந்த உதாரணத்தைச் சொல்லியிராவிட்டால், ராஜாஜியின் மேற்படி பேச்சே அப் பெண்மணியின் ஞாபகத்துக்கு வந்திராது.

யார் எப்படி வேணுமானாலும் திரித்துக் கூறட்டும். யாருக்கு என்ன கோபம் வேணுமானாலும் வரட்டும். ராஜாஜி தம் பிரசங்கங்களில் உதாரணம் சொல்லி விளக்கும் முறையைக் கைவிட மாட்டார் என்று நம்புகிறேன்.

* * *

அந்தத் திருவல்லிக்கேணி மூதாட்டியின் பிரார்த்தனையை பகவான் கேட்டு அதற்காகவே ராஜாஜியைத் திருநெல்வேலிப் பிரயாணம் மேற்கொள்ளச் செய்தார் என்று தோன்றியது. திருநெல்வேலி விஜயம் ராஜாஜிக்கு அவ்வளவு உற்சாகம் அளித்தது. அங்கே பொது ஜனங்களுடைய அன்பையும் ஆதரவையும் உற்சாகத்தையும் குதூகலத்தையும் பார்த்த பிறகு, அவருடைய தேசகசுகம் அபிவிருத்தி அடையும்; இன்னும் கொஞ்சகாலம் முதன் மந்திரி வேலை பார்த்து, ஜனங்களுக்கு இன்னும் அநேக நன்மைகளைச் செய்வார் என்று நம்புவதற்கும் இடம் இருந்தது. அவர் ரயிலில் ஏறுகிற வரையில் திருநெல்வேலி மக்களின் உற்சாகமும் தொடர்ந்து கொண்டே வந்தது.

இவ்வளவு உற்சாகமான கட்டத்திலேயே நாலும் இக் கட்டுரையை நிறுத்தி விடுகிறேன். இன்னும் நிறுத்து வளர்த்திக் கொண்டே போனால் திருநெல்வேலி ஒருவேளை அருப்புக் கோட்டையில் வந்து முடிந்தாலும் முடிந்துவிடும். வேண்டியதில்லை; திருநெல்வேலி திருநெல்வேலியாகவே இருக்கும்படி காந்திமதிநாதர் அருள் புரியட்டும்.

## இந்தியாவின் கலாசார

## முன்னேற்றத்திற்கு








**தி அஸோஸியேடட் சிமெண்டு கம்பெனிஸ் லிமிடெட்**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்**

SISTA'S - CMI - 70 A TAMIL




## 4. அமுதத்தைப் படைத்தாள்!

நம்மவர்களுக்குள் ஒரு அபிப்பிராயம்.

நம்முடைய முன்னோர்கள் பாடிய பாடல்கள் எல்லாம், இந்திரன் சந்திரன் என்று எட்டாத வஸ்துக்களுக்குள் போகுமே ஒழிய, சாமான்யமான நம்முடைய வாழ்க்கையோடு ஒட்டிய விஷயங்களில் கலந்து கொள்வதில்லை என்பதாக. ஹாஸ்யரஸம் நம்முடைய முன்னோர்களுக்கு இல்லை யென்றும் சொல்லிக்கொள்ளுவார்கள்.

இந்த விஷய சம்பந்தமாகக் கொஞ்சம் பார்க்கலாம்.

** ** **

ஔவைப் பிராட்டியார் தாய் தந்தை யில்லாத ஒரு பெண் குழந்தையை அருமையாய் வளர்த்து வந்தார். இயல்பாகவே பெண்ணுக்குக் கல்வி அறிவு, மற்றும் பகுத்தறிவு, மக்களிடம் பாசம் எல்லாம் வளர்ந்து வந்தன.

கல்யாணமாகிற பருவம் பெண்ணுக்கு வந்தது. தகுதியான ஒரு இளைஞனுக்குப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்தார். புருஷன் சாமான்யமான குடும்பஸ்தன் தான். ஆனாலும் குடும்பத்தை — தன்னையும் மனையாளையும்— அந்தஸ்துடன் பார்த்து வந்தான்.

கல்யாணமாகிக் குடித்தனம் ஏற்பட்டுச் சில மாசங்கள் கழிந்ததும் தன் பெண்ணையும் குடித்தனச் சீரையும் பார்ப்பதற்காக ஊரை விட்டுப் புறப்பட்டார் ஔவையார். மாலை ஏழு மணிக்குப் பெண் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். ஒரே ஆசையோடு ஔவைப் பிராட்டியாரைப் பெண் வரவேற்றாள். உட்காரச் சொன்னாள்.

"இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் பின் தோட்டத்துக்குப் போனாள். அடுக்களைக்குள் நுழைந்தான். சமையல் செய்தான். சமையல் பூர்த்தியாய் விட்டது. முக்கால் மணி நேரத்துக்குள்ப் பூர்த்தியாய் விட்டது. இலையையும் போட்டான்.

ஔவைப் பிராட்டியாருக்குச் சாதம், குழம்பு எல்லாம் வெகு ருசியாய் இருந்தன. "பலே! சமர்த்து!" என்று மகளைப் பாராட்டினாள். சாப்பாடு முடிந்தது. கையலம்பி விட்டு வெளித் திண்ணையில்ப் போய் உட்கார்ந்தான்.

ஔவைப் பிராட்டியாரை எதிர்பார்த்து முன் கூட்டியே சில தமிழறிஞர்கள் வந்திருந்தார்கள்.

அவர்களிடம் தன் பெண் சமைத்த நேர்த்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்தான். எல்லாம் கீரையைப் பற்றித்தான். பின் தோட்டத்திலுள்ள கீரைப் பாத்தியிலிருந்து கொண்டு வந்த கீரையைப் பற்றித்தான்.

பேச ஆரம்பித்தான்: "கீரையை அடுப்பிலிருந்து அப்படியே எடுத்துப் பரிமாறினாள். அதன் வாசனை தனி. நிறம் கண்ணைப் பறிப்பதான நிறம்.



## வடம் பிடிக்க வாருங்கள்!

தேர்த் திருவிழா என்றால் அபூர்வமாக, வருஷத்துக்கு ஒரு தடவை வருகிற விஷயம். தேரைச் சுற்றிக் கும்பிடுவார்கள், வடத்தைத் தொட்டுக் கும்பிடுவார்கள். தேரை இழுப்பது ஒரு சிறந்த புண்ணியம்.

** ** **

ஸ்ரீரங்கத்தில் தேர்த்திருவிழா. ஸ்ரீரங்கநாதரைக் காலையிலேயே தேரில் எழுந்தருளச் செய்து விட்டார்கள்.

மணி எட்டாய் விட்டது. ஜனங்கள் கடைத்தெருப் பக்கமாய் நிற்கிறார்கள். திண்ணைகளிலும் உட்கார்ந்து வம்பளக்கிறார்கள். தேர்ப்பக்கமாக வரவே இல்லை.

** ** **

ருசி பார்த்து விட்டு, 'என்ன ஓரையா?' என்று கேட்டேன். இனி வருகிறது பாட்டு:

வெய்தாய் நறுவிதாய்,
  வேணளவும் தின்பதாய்:
நெய்தான் அளவி
  நிறம்பசந்தும், — பொய்தான்
அடகென்று சொல்லி
  அமுதத்தை இட்டார்
கடகம் செறிந்த
  கையார்.

[வெய்தாய்: சூடு தணியாமல் வெது வெது என்று; நறுவிதாய்: மணம் உள்ளதாய்; வேணளவும் தின்பதாய்: எவ்வளவு சாப்பிட்டாலும் திகட்டாததாய்; நெய்தான் அளவி நிறம் பசந்தும்: பக்குவமாக நெய் கலந்து கருகிப் போகாமல் பசுமையாய்த்தானே; பொய்தான் அடகென்று சொல்லி: ஏதோ கீரை என்று சொன்னாள் அது பொய்தான்; அமுதத்தை இட்டார்: வாஸ்தவத்தில் படைத்தது தேவாமிருதம்தான்; கடகம் செறிந்த கையார்: அழகிய வளையல்கள் அணிந்த கையை உடைய பெண். பெண்களைப் பன்மையில் உபசரிப்பது பூர்வ காலத்து வழக்கு.]

குறிப்பு: விஷயம், சாமான்ய விஷயம் தான், சந்தேகம் இல்லை. ஆனாலும் அருமையும் ஹாஸ்யமும் எளிமையும் அபாரமாய் ஒலிக்கின்றன பாடலில்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் ஒரு சிறந்த வைஷ்ணவக் கவிஞர். ஸ்ரீரங்கநாதரிடம் நல்ல பக்திபூண்டவர்.

காவேரி நதியில் ஸ்நானம் செய்துவிட்டு, துவாதச நாமங்களை அழகாய் இட்டுக் கொண்டு, குண்டஞ்சி சோமன் உடுத்திக் கொண்டு பக்தி புஞ்சிதராய்த் தேருக்கு வந்தார். தேர்ப் பக்கம் யாருமே இல்லை, திண்ணையில் உட்கார்ந்து இருப்பவர்களையும் தெருவில் நின்று வீண் பொழுது போக்கிக் கொண்டிருப்பவர்களையும் பார்த்து ஆங்காரத்தோடு பேசுவதாக பாவம்.

ஒன்றும் அறியாத
  ஊமர்காள், தென் அரங்கர்
இன்று திருத்தேரில்
  ஏறினர்:—நின்று
வடம்பிடிக்க வாருங்கள்,
  வைகுந்த நாட்டில்
இடம்பிடிக்க வேண்டும்
  எனில்.

[ஊமர்காள்: அறிவிலிகளே; ஊமை யென்றால் அறிவிலி என்பது அக்காலத்து வழக்கு]

வைகுந்தத்தில் இடம் இல்லை யென்றால், இடமெல்லாம் நரகத்தில்தான் என்பது குறிப்பு.

## மூன்று கடிகார ஆர்டருக்கு ஒன்று இனாம்!

உயர்தரக ஸ்விஸ் வாட்சுகள், ஸ்விஸ் தயாரிப்பு. 5 வருஷ உத்தரவாதம். இதுவரை இக் குறைந்த விலைக்குக் கொடுத்ததில்லை. ஸ்டாக்குகள் சொற்பமே உள்ளன.

**இலவசம்** மூன்று வாட்சுகள் ஆர்டருக்கு ஒரு கைக்கெடிகாரமும் இரண்டுக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் ஒரு கடிகாரத்துக்கு ஒரு ஸீபர் பினைன் பவுண்டன் பேனாவும் இனாம். மேலும் ஒரு வெல்வெட் பெட்டியும் அழகான ஸ்ட்ராப்பும் இனாம்.

நெ. 1.  சைஸ் 6½''

15 ஜுவல்ஸ் ஸ்டீல்பேக் கேஸ் ரூ. 38/-
15 ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு ரூ. 40/-

நெ. 2.  சைஸ் 6½''

15 ஜுவல்ஸ் ஸ்டீல்பேக் ரூ. 38/-
15 ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு ரூ. 40/-

நெ. 3.  சைஸ் 10½''

வாட்டர் ப்ரூப்

15 ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் ரூ. 48/-
15 ஜுவல்ஸ் க்ரோம் உயர் ரகம் ரூ. 52/-
17 ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் ரூ. 55/-

நெ. 4.  சைஸ் 8½''

5 ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு ரூ. 32/-
15 ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் ரூ. 38/-
15 ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு ரூ. 40/-

நெ. 5.  சைஸ் 10½''

13 சைஸ் க்ரோம் கேஸ் ரூ. 19/-
5 ஜுவல்ஸ் பிராஞ் ரோல்டுகோல்டு ரூ. 25/-
15 ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் ரூ. 38/-
15 ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு ரூ. 40/-




இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் ரூ. 19/-
இங்கிலீஷ் அலாரம் உயர் ரகம் ரூ. 21/-
ரயில்வே ரெகுலேட்டர் பாக்கெட்வாட்ச் ரூ. 13/-

**PIONEER WATCH COMPANY**
Post Box No. 11428, CALCUTTA-6

---

# நரைமயிர் நிரந்தரமாக போய்விட்டது



# ஹென்றல்

நிரந்தரமாக நரையை நீக்குகிறது

Pearline Paris Ltd.
Bombay.




## 2. சூரிய குமாரன்

இருள் வேகமாகச் சூழ்ந்து வந்தது. வானத்தில் நட்சத்திரங்கள் கூட இல்லை. அப்படி மேகம் 'கருகும்' என்று சூழ்ந்திருந்தது. தடம் தெரியவில்லை. இருந்தாலும் சம்பத்குமாரன் தன் குதிரை மீது தட்டுத் தடுமாறிப் போய்க் கொண்டிருந்தான்.

கொஞ்ச தூரம் போனவுடன் ஒரு பிரும்மாண்டமான மலை குறுக்கே நின்றது. பக்கத்தில் திரும்பினான். அவனுக்கு இருபக்கத்திலும் வானளாவிய மலைகள் எழுந்து நின்றன. "சரி, இனி வந்த வழியே திரும்பிப் போவோம்" என்று திரும்ப முயன்றான். அவனுக்குப் பின்னாலும் ஒரு பெரிய மலை எழும்பியிருந்தது. இவற்றையெல்லாம் பார்த்தவுடன் அவனுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. 'சற்றுமுன் நான் வந்த வழியில் மலையும் இருக்கவில்லை, ஒன்றுமிருக்கவில்லை. அதற்குள் எப்படி ஒரு பெரிய மலை எனக்கு மூன்று பக்கமும் எழுந்தது' என்று வியந்தான்! ஆம், அவனுக்கு எப்படித் தெரியும் இதெல்லாம் கிழ மந்திரவாதியின் வேலை என்பது?

கிழ மந்திர வாதியை அலட்சியம் செய்து விட்டு மேலே வந்தானல்லவா சம்பத்குமாரன்? அப்பொழுதே இவனைத் தண்டிக்க வேண்டும் என்று கறுவிக் கொண்டான் கிழ மந்திரவாதி என்பதைப் பார்த்தோம். அப்படி நினைத்த மந்திரவாதி ஏதோ ஜபித்தான். அவ்வளவுதான்! சம்பத் குமாரனைச் சூழ்ந்து பிரும்மாண்டமான மலைகள் எழும்பி அவனைச் சிறைப்படுத்திவிட்டன! அவனுக்கும் வெளி யுலகத்துக்கும் தொடர்பு இல்லாமல் செய்து விட்டன! பாவம், சம்பத் குமாரன் அந்த இயற்கைச் சிறைக் கூடத்திலிருந்து தப்ப வழியில்லாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

சம்பத்குமாரனைப் பற்றி மாதக் கணக்கில் காந்தார தேசத்து அரண்மனைக்குத் தகவல் வரவில்லை. ஆகவே, எல்லோரும் சம்பத்குமாரன் இறந்து விட்டான் போலிருக்கிறது என்று தீர்மானித்து விட்டார்கள்.

உடனே, இரண்டாவது ராஜகுமாரனாகிய நிர்மல குமாரன் தான் ஜீவரசம் கொண்டு வரப் போவதாகப் புறப்பட்டான். மந்திரி, பிரதானிகள் மற்றுமுள்ள பெரியோர்கள் தடுத்துப் பார்த்தார்கள். "அப்பா, உன் அண்ணா போன அடிச்சுவடு தெரியாமல் போய் விட்டான். நீயும் ஏன் இந்த வீண் முயற்சியில் ஈடுபடுகிறாய்?— வேண்டாம்" என்று தடுத்தார்கள்.

"அண்ணாவுக்கு நேர்ந்த கதி எனக்கும் நேர வேண்டும் என்பது என்ன அவசியம்? நான் வெற்றிகரமாகத் திரும்பக் கூடாதா? ஆகவே, நான் போகத்தான் செய்வேன்" என்று பிடிவாதம் பிடித்தான்.

இப்படிப் பிடிவாதம் செய்பவர்களை யாரால் என்ன செய்ய முடியும்? 'அவனவன் தலையெழுத்துப் பிரகாரம் நடந்து விட்டுப் போகிறது' என்று நினைத்துக் கொண்டு அனுப்பி வைத்தார்கள். நிர்மல குமாரன் குதிரை மேல் ஏறி டக்டக் என்று தன் பிரயாணத்தைத் தொடங்கினான்.

அவனும் சூரியன் மேற்கே மறையும் வேளைக்கு மலைச்சாரலை அடைந்தான்.

மந்திரவாதிக் கிழவன், இரண்டாவது ராஜ குமாரன் வருவதைப் பார்த்தான். முதல் ராஜகுமாரனைக் கேட்டது போலவே, "நீ யாரப்பா? எங்கே போகிறாய்?" என்றான்.

இவன் முதல் ராஜ குமாரனை விடத் திமிராகப் பதில் சொல்லாமல் மேலே சென்றான். ஆம். தன் அண்ணனால் சாதிக்க முடியாததைத் தான் சாதிக்கப் புறப்பட்டிருக்கிறான் அல்லவா? அவனுக்குத் தன் தமையனைவிட அதிகக் கர்வம் இருக்கத்தானே செய்யும்? அதனால்தான் பதில் சொல்லாமல் போனான்.

இதைப் பார்த்தான் கிழ மந்திரவாதி. 'உன் அண்ணனுக்கு நேர்ந்த கதிதான் உனக்கும்' என்று மனசுக்குள் கறுவினான்.

அவ்வளவுதான்! நிர்மலகுமாரனும், சம்பத்குமாரன் சிறைப்படுத்தப்பட்ட அதே சிறையில் அகப்பட்டுக் கொண்டான்.

மாதம் ஒன்று, இரண்டு என்று ஆறு மாதங்கள் கழிந்தன. காந்தார நாட்டு மக்கள், "சரி, இரண்டாவது ராஜகுமாரனும், முதல் ராஜகுமாரன் அடிச்சுவட்டைப் பின் பற்றிப் போய்விட்டான். இனி நிர்மல குமாரன் வருவது மிகமிகத் துர்லபம். பட்டத்துக்குரிய இளவரசன் சூரியகுமாரன்தான்"

யும் என்ற அவநம்பிக்கை ஏற்பட்டது. இருப்பினும் அவன் மனசைவிட்டுக் கனவில் கண்ட அழகிய நங்கை மறையவில்லை. அவள் கூறிய வார்த்தைகளும் அவன் காதில் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருந்தன. ஆகவே, அவன் மனசு ஜீவரசத்தைத் தேடிப் புறப்பட்டு விடவேண்டும் என்று துடியாய்த் துடித்தது.

இந்த முடிவைத் தந்தையிடமோ மந்திரி பிரதானிகளிடமோ சூரியகுமாரன் தெரிவிக்கவில்லை. 'அவர்கள் போகவே கூடாது' என்று தடுத்து விடுவார்களோ என்று பயந்தான். ஆகவே யாரிடமும் சொல்லாமல், ஒரு நாள் நள்ளிரவில் புறப்பட்டுவிட்டான்.

பொல பொல வென்று பொழுது விடியும் வேளை சூரியகுமாரனும் காந்தார நாட்டுக் கிழக்கு எல்லையான மலைப்பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தான்.

அவன் வருகையைக் கண்ட கிழ மந்திரவாதி பழையபடி "யாரப்பா நீ? எங்கே போகிறாய்?" என்று விசாரித்தான்.

குரல் வந்த திசையை நோக்கித் திரும்பிப் பார்த்து "தாத்தா, நீதான் கேட்டாயா?" என்று கேட்டான் சூரியகுமாரன் அன்பு தவழும் குரலில்.

"ஆமாம், அப்பா! நீ யார்?" என்று

அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"OATINE CREAM is indispensable for my toilet. I have been using it for a long time, and find it delightful, and extremely necessary to preserve a perfect skin."*

Sathna Bose

**Oatine**

*Snow*




**Oatine**

*Cream*

Make sure seal is unbroken

01




ஆர். எஸ். மணி

மேலத் தெருவில் ஒரு வீடு காலியாக இருக்கிறது என்பதை அறிந்த உடனேயே அந்த வீட்டைப் பார்க்கப் புறப்பட்டான் ரமணி. வீட்டின் சொந்தக்காரர் காலியாக இருந்த வீட்டைக் காண்பித்தார். முன்னால் இரண்டு அறைகள், நடுவில் ஹால், பின்னால் சமையல் அறை, பின்பக்கத்தில் சிறிய தோட்டம். வீடு பார்ப்பதற்கு மிகவும் சௌகரியமாகத்தான் காணப்பட்டது. ஆனால் அந்த வீட்டை இரண்டு பக்கத்து வீடுகளின் தாய்ச் சுவர்களும் அடைத்துக் கொண்டிருந்த படியால் காற்று வராதோ என்றுதான சந்தேகித்தான் ரமணி.

வீட்டின் சொந்தக்காரர் வாடகை முப்பது ரூபாய் என்றவுடன் ஆச்சரியமடைந்து விட்டான் ரமணி. வீட்டைப் பார்க்கும் போது வாடகை மிகவும் குறைவு என்று தான் அவனுக்குத் தோன்றியது. வீட்டின் சொந்தக்காரர் அவனுடைய ஆச்சரியத்தைப் புரிந்து கொண்டவர் போல் விஷயத்தை விளக்கிக் கூற ஆரம்பித்தார்.

"வீடு ரொம்பவும் வசதியானதுதான். வாடகையும் குறைவு. ஆனால்..."

"ஆனால் என்ன?

"இந்த வீட்டில் ஒரு மோகினிப் பிசாசு இருப்பதாக......?"

"மோகினிப் பிசாசா?"

"ஆமாம்! இதற்கு முன்பு இந்த வீட்டில் குடி இருந்தவர்களின் வீட்டுப் பெண் ஒருத்தி சமையல் அறையில் வேலையாக இருக்கும் போது திடீரென்று இறந்து விட்டாள். அதனால் அவர்களும் உடனே காலி செய்து விட்டனர். அப்போது முதல் குடி வந்தவர் யாரும் இந்த வீட்டில் நிலைத்திருப்பதில்லை. இந்த வீட்டில் இறந்து போனவளின் ஆவி நடமாடுவதாகவும் இரவு வேளையில் ஏதோ ஒருவித பயங்கர சப்தம் கேட்பதாகவும் சொல்லிக் கொள்கிறார்கள். நீங்கள் வந்த பிறகு கஷ்டப்படக் கூடாது என்றுதான் இதை முன்னதாகவே சொல்கிறேன். இதில் உங்களுக்கு ஆட்சேபனை இல்லை என்றால்..."

"பிசாசாவது, பேயாவது? இதெல்லாம் சுத்தப் பைத்தியக்காரத்தனம். இவைகளில் எனக்கு நம்பிக்கையே இல்லை. இப்போதே அட்வான்ஸ் கொடுத்து விடுகிறேன். இன்று இரவே குடி வரத் தயார்" என்று கூறியபோது ரமணியின் துணிச்சலான பேச்சையும் மனோதிடத்தையும் கண்டு வீட்டின் சொந்தக்காரர் ஆச்சரியப் பட்டுப் போனார்.

ரமணி அந்த வீட்டை முடிவு செய்துகொண்டு, இடம் கிடைக்காததினால் தன் தாயார் வீட்டிற்குப் போயிருந்த தன் மனைவி சரஸாவைப் புறப்பட்டு வரும்படி தந்தி கொடுத்து விட்டு அன்று இரவே புதிய வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

ரமணி முன்கட்டு அறையில் படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டு படுத்தான். தூங்க ஆரம்பித்த அவன் மனத்தில் வீட்டின் சொந்தக்காரர் கூறிய விஷயங்கள் ஒரு முறை தோன்றி மறைந்தன. 'பேயாவது பிசாசாவது? இரண்டு பக்கங்களிலும் வீடுகள் இருக்கும்போது என்ன பயம்?' என்று எண்ணமிட்டவனாய்த் தூங்க முயன்றான். இருந்தாலும் பிசாசைப் பற்றிய நினைவும் தான் கேள்விப்பட்டிருந்த பேய்க் கதைகளும் அவன் மனத்திரையில் தோன்றி அவன் நெஞ்சில் ஒரு வித சஞ்சலத்தை உண்டாக்கி அவனைத் தூங்கவொட்டாமல் செய்தன.

அகால மரண மடைந்தவர்களின் ஆவி பிசாசு உருவில் நடமாடும் என்று அவன் கேள்விப்பட்டிருந்த படியால் ஒரு வேளை இறந்து போனவர்களின் ஆவி உலாவிக் கொண்டிருக்குமோ என்று நினைத்தான். ஆனால் 'சே' இதெல்லாம் வெறும் பைத்தியக்காரத்தனம் என்று தன்னையே தேற்றிக் கொண்டு, தன் நினைவை வேறு திசைகளில் மாற்ற முயன்றான். ஆனால் அந்த வீட்டில் காணப்பட்ட ஒருவித பயங்கர அமைதி அவனுக்கு அடிக்கடி பிசாசுகளின் நினைவை உண்டாக்கி அவன் உறுதியை உலுக்கிய வண்ணம் இருந்தது.

சுவரில் மாட்டி இருந்த கடிகாரம் 'டக் டக்' என்று ஓடிக் கொண்டிருந்தது. வீதியிலும் அக்கம் பக்கத்திலும் நடமாட்டம் அடங்கி எங்கும் நிசப்தமாக இருந்தது ரமணி எப்படிப் புரண்டு படுத்தும் தூக்கம் வரவில்லை.

கடிகாரம் பன்னிரண்டு அடித்து ஓய்ந்தது. அப்போது வாசலில் நாய் ஒன்று வாள் வாள் என்று குலைத்து அமைதியைக் கலைத்தது. பேய் பிசாசுகள் நடமாடுவது நாய்களின் கண்களுக்குத் தெரியும் என்று அவன் கேள்விப்பட்டிருந்தபடியால் ஒரு வேளை மோகினிப் பிசாசின் நடமாட்டத்தைக் கண்டுதான் நாய் குலைக்கிறதோ என்று எண்ணினான். அந்த எண்ணத்தை உறுதிப் படுத்துவது போல் 'தண் தண்' என்று யாரோ நடப்பது போன்ற காலடி யோசை கேட்டது. அவ்வளவுதான்! அடுத்த கணம் ரமணியின் நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது.



சிறிது நேரம் வரை காலடி போசை கேட்டது. அதைத் தொடர்ந்து கதவு திறக்கப்படும் ஒலியும் கேட்டது. ஒரு வேளை வீட்டில் திருடன் வந்து விட்டானோ என்று நினைத்தான். படுக்கையை விட்டு எழுந்திருக்க அவனுக்குத் துணிவு வரவில்லை. எழுந்திருக்காமலும் இருக்க முடியவில்லை. எது வந்தாலும் வரட்டும் என்று ஒரு கையில் 'டார்ச்' விளக்குடனும் மற்றொரு கையில் ஒரு தடியுடனும் அறையை விட்டு வெளியே வந்து கையிலிருந்த விளக்கொளியினால் நாலா பக்கமும் பார்த்த வண்ணம் மெல்ல நடந்தான். சாத்தப்பட்டிருந்த வாசல் கதவு சாத்தியபடி இருந்தது. பின் பக்கத்துக் கதவும் தாளிட்டுக் கிடந்தது. எங்கும் மனித அரவம் காணவில்லை. 'மிரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பது போல் தான் கேட்ட ஓசை மனப் பிராந்தியினால் இருக்குமோ என்று நினைத்தான் மணி.

பிறகு சற்றுத் துணிவுடன் பின் பக்கத்துக் கதவைத் திறந்தான். அவ்வளவுதான்! மறுகணம் 'தொப்' பென்று அடுத்த வீட்டு முருங்கை மரத்திலிருந்து ஏதோ ஒன்று கீழே குதித்தது. மறுபடியும் 'தண் தண்' என்று நடக்கும் ஓசை கேட்டவுடன் ரமணிக்குக் குலை நடுக்கம் ஏற்பட்டு விட்டது. முருங்கை மரங்களில் பிசாசுகள் இருக்குமென்றும் அவைகள் இரவு வேளைகளில் மரத்தில் ஒளிந்தும் கீழே குதித்தும் பேயாட்டம் ஆடும் என்றும் அவன் கேட்டிருந்த படியால், தான் கேட்ட ஓசை எல்லாம் மோகினிப் பிசாசின் ஆர்ப்பாட்டம் தான் என்று உணர்ந்து பயத்தினால் நெஞ்சு படபடக்க, உடல் கிடுகிடுக்க, அதற்குமேல் அங்கு நிற்பதற்கும் சக்தியற்றவனாய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்று படுக்கையில் படுத்துக் கொண்டான் இருந்தபோதிலும் அவன் உடல் மட்டும் நடுங்கிக் கொண்டிருந்தது. என்னதான் திட சித்தம் கொண்டிருந்த போதிலும் பிசாசுகள் இருப்பதை உணர்ந்த பிறகு யாருக்குத்தான் அச்சம் ஏற்படாது?

சுமார் அரைமணி நேரத்திற்குப் பிறகு மோகினிப் பிசாசின் சேஷ்டைகள் ஆரம்பமாயின. அந்தப் பிசாசு ஒரு கல் உரலைக் கீழே எடுத்து வைத்துக் கொண்டு 'கடகட' 'கடகட' வென்று அரைத்தது. முதலில் சற்று மெதுவாக அரைத்த அந்தப் பிசாசு பிறகு அதிவேகமாக அரைக்க ஆரம்பித்து விட்டது. இடையிடையே கண்ணாடிப் புட்டிகளைத் திறப்பதும், தகர டப்பாக்களைக் கீழே போடுவதுமாக இருந்தது. இடையில் பெருமூச்சு விட்டுக்கொண்டும் மூக்கை உறிஞ்சிக் கொண்டும் இருந்தது.

இவைகளை எல்லாம் கண்களை இறுக மூடிய வண்ணம் ஓசையின் மூலம் கேட்ட ரமணியின் உள்ளம் துடியாகத் துடித்தது. வீட்டுக்காரரின் பேச்சைக் கேட்காமல் ஏன் இந்த வீட்டிற்குக் குடி வந்தோம் என்று அப்போது தான் அவனுக்குத் தோன்றியது. பொழுது விடிந்தவுடன் இந்த வீட்டைக் காலி செய்து விட்டு மறு வேலை பார்க்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு தூங்க முயற்சி செய்தான். இரவு சுமார் மூன்று மணிக்கு மோகினிப் பிசாசின் பேயாட்டம் அடங்குவதற்கும் ரமணி மெல்லக் கண்ணயர்வதற்கும் சரியாக இருந்தது.

ரமணி மறுநாள் பொழுது விடிந்தவுடன் ஒரு வண்டியை ஏற்பாடு செய்து சாமான்களை ஏற்றி வீட்டைக் காலி செய்து கொண்டிருக்



ஒரு மாணவன் :—எனக்குப் பெரிய மனுஷர்கள் சிபாரிசு பண்ணியும் காலேஜிலே இடம் கிடைக்கவில்லே! ஆனல் உனக்கு எப்படி இடம் கிடைத்தது? யாராவது ரொம்பப் பெரிய மனுஷாளுடைய சிபாரிசு கிடைச்சுதோ?

இன்னெரு மாணவன் :— ஹூம், அதெல்லாம் ஒன்றுமில்லே, அப்பா! அந்தக் காலேஜ் பிரின்ஸ்பாலின் மாப் பிள்ளே நான்! என்ன செய்யட்டும்? காலேஜிலே, இடம் கிடைப்பதற்காக அவர் பெண்ணேக் கல்யாணம் பண் ணிக் கொண்டேன்!

---

தான். அப்போது அடுத்த வீட்டிலிருந்த கிழவர் ஒருவர் கையில் வேப்பங் குச்சியுடன் பல் தேய்க்க வாசலுக்கு வந்தார். வண்டி யில் சாமான்களே ஏற்றிக் கொண்டிருக்கும் ரமணியைப் பார்த்து, "நேற்றுத்தானே வந்தீர்கள்? இதற்குள்ளாகவா காலி செய் கிறீர்கள்?" என்ருர்.

"ஆமாம், ஸார்! தெரியாத்தனமாக இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டேன்! இனி மேல் ஒரு நிமிஷம் இருக்கமாட்டேன்!"

"அடாடா! ஏன் ஸார் அப்படி?"

"மனிதர்கள் வசிப்பதற்கு ஏற்ற வீடே இல்லே, ஸார் அது!"

"அப்படி யென்ருல் எனக்கு ஒன்றும் புரியவில்லேயே, ஸார்!"

"ஆமாம், பிசாசு நடமாடும் வீட்டில் எப் படி இருக்க முடியும்?" என்ருன் ரமணி.

"பிசாசா?" என்று ஆச்சரியத்துடன் கேட் டார் அவர்.

"ஆமாம்! நேற்று இரவெல்லாம் இந்த வீட்டில் பிசாசு ஒரே ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது. இந்த வீட்டில் இருந்த பெண் வேலே செய்யும்போது இறந்து போனுள். அதனல் அவள் ஆவி சமையல் கட்டில் அரைத்துக் கொண்டும், புட்டிகளே யும் தகர டப்பாக்களேயும் உடைத்துக் கொண்டும் இருக்கிறது" என்று முதல் நாள் இரவு தனக்கு ஏற்பட்ட அனுபவங்களே யெல்லாம் விவரமாகக் கூறினன் ரமணி.

அவனுடைய வார்த்தைகளே ஒன்று விடா மல் மிகவும் கவனத்துடன் கேட்டுக் கொண் டிருந்த அந்தக் கிழவர் 'ஹா ஹா ஹா' என்று சிரித்தார்.

"அட பைத்தியக்கார மனுஷரே! இதற் காகவா பயந்து கொண்டு வீட்டைக் காலி செய்கிறீர்கள்? பேயுமில்லே, பிசாசுமில்லே" என்று சொல்லி விட்டு அவனிடம் விஷயத்தை விளக்கினர் அவர்.

அவர் கூறிய வரலாற்றைக் கேட்டதும் ரமணிக்கு வந்த சிரிப்பை அடக்க முடிய வில்லே. தான் இவ்வளவு முட்டாளாகவும் பயங்கொள்ளியாகவும் இருப்பான் என்று அவன் நினேக்கவே இல்லே.

கிழவர் சொன்னதைக் கேட்டால், ரமணி மாத்திரம் அல்ல, எல்லோருமே சிரிப் பார்கள்.

அந்தக் கிழவர் ஒரு நாட்டு வைத்தியர். லேகியம், சூரணம் முதலிய மருந்துகளே அவர் அநேகமாக இரவு வேளேகளில்தான் தயாரிப்பது வழக்கம். சில மருந்துகளே இரவு வேளேகளில் தயாரிப்பதனல் அவற்றுக்குச் சக்தி அதிகம் ஏற்படுகிறது என்று அவர் கூறினர். ரமணி அந்த வீட்டுக்குக் குடி வந்த அன்று இரவு அந்தக் கிழவர் தான் முருங்கை மரத்தில் மருந்துக்காக முருங்கைக் கீரை பறித்தார். பிறகு அந்தக் கீரையைக் கொண்டு போய் மருந்து தயார் செய்திருக்கிருர்.

கிழவர் மருந்து செய்வதற்காக அங்கும் இங்கும் சென்றது, மருந்துக் கலுவத்தில் மருந்து அரைத்தது. எல்லாமாகச் சேர்ந்து ரமணியை நடுங்கி வீட்டையே காலி பண்ணும் படி செய்து விட்டது.

தன்னேப் போலவே அந்த வீட்டுக்குக் குடி வந்தவர்கள் ரொம்பப் பேர் வைத்தியர் பாதி ராத்திரியில் மருந்து தயாரிப்பதை ஏதோ மோகினிப் பேயின் நடமாட்டம் என்று தீர்மா னித்து வீட்டைக் காலி செய்து கொண்டு போயிருக்கிருர்கள் என்னும் விவரம் ரமணிக் குத் தெரிய வந்ததும் அவனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லே.

வீடு முழுவதும் காலி பண்ணிவிட்டுப் போன பிறகு இந்த உண்மையைச் சொல்லா மல், சாமான்களே எடுத்து வண்டியில் வைத் துக் கொண்டு புறப்படும் போதே சொன்ன தற்காக ரமணி வைத்தியருக்குத் தன் மனப் பூர்வமான நன்றியைத் தெரிவித்தான். பிறகு வண்டியிலிருந்த சாமான்களே மறுபடியும் வீட்டுக்குள்ளே தைரியமாகக் கொண்டு போய் வைத்தான்.

மோகினிப் பிசாசு நடமாடும் வீட்டில் ரமணி மிகவும் தைரியமாகக் குடி இருக்கும் ரகசியம் யாருக்கும் தெரியாது. வீட்டின் சொந்தக்காரருக்கே தெரியாதபோது மற்ற வர்களுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?




வங்காளிக் கதை : **ஸ்ரீ பிரமதநாத் பிஷி**

மொழிபெயர்ப்பு : **ரா. வே. ஸ்ரீனிவாஸன்**

ஒரு நாள் ஒரு பிக்ஷு இமயமலையின் அடிவாரத்திலுள்ள அடர்ந்த காட்டில் வேகமாகச் சென்று கொண்டிருந்தார். அவர், நேபாள மலைப் பிரதேசத்திலுள்ள பசுபதிநாத் என்ற புண்ணிய ஸ்தலத்திற்குச் சென்று விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அப்பொழுது கதிரவன் மறையும் நேரம். இன்னும் சற்று இருட்டி விட்டால் கொடிய மிருகங்கள் தம் வேட்டைக்குப் புறப்பட்டு விடும்.

பிக்ஷு தாம் இருக்கும் ஆபத்தை நன்கு உணர்ந்திருந்தார். அவருக்கு அந்தக் கடினமான பாதையின் ஒவ்வொரு அடியும் தெரியும். அருகே இருக்கும் சிறு கிராமத்தை அடையுமுன் சந்திரனில்லாத அந்தகாரம் எங்கும் கவிந்துவிடும். அவருக்கு வயது அதிகமாகிக் கொண்டிருந்தாலும் தேக பலம் மட்டும் குன்றாமலிருந்தது.

தமது காலடிகளை அவர் வேகமாக வைத்து நடந்தார். அவரது புருவங்களில் கவலையின் ரேகை படர்ந்தது.

நாலுபுறமும் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த அவர் கண்களுக்கு, அதிர்ஷ்டவசமாக, ஒரு மனிதன் உட்சென்று தாராளமாகப் படுக்கப் போதுமான இடமுள்ள குகை யொன்று ஒரு சிறு குன்றின் சாரலில் தென்பட்டது. மனக் களிப்புடன் அவர் அந்தக் குகைக்குள் பாய்ந்து, கொடிய மிருகங்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிய கடவுளுக்கு நன்றி செலுத்தினார்.

குகைக்குள் போதுமான இடமிருந்தது. மூலையில் ஒரு சாம்பல் குவியலிருந்தது. இதிலிருந்து முன்னரும் வழிப்போக்கர்கள் துஷ்ட மிருகங்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இந்தக் குகையில் அடைக்கலம் புகுந்திருக்கிறார்களென்று பிக்ஷுவுக்கு விளங்கியது.

அவருக்கு மிகக் களிப்பு ஏற்பட்டது. ஆகா! இப்பொழுது தம் பசியை மட்டும் தணிக்க ஏதாவது உபாயமிருந்தால்......! ஆனால் சந்நியாசியின் வாழ்க்கையே, பசிக்கும் மற்றும் பல இன்னல்களுக்கும் சவால் விடுவதல்லவா! மேலும் பட்டினி கிடந்து அவருக்கு மிகப் பழக்கம். அருகில் சலசலவென்று ஓடிய சிறு நதியிலிருந்து வேண்டுமளவும் குளிர்ந்த நீர் அருந்திவிட்டுக் குகையின் தரையில் மான்தோலை விரித்துப் படுத்தார். சிறிது நேரத்தில் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கிவிட்டார்.

சந்நியாசிகள் எப்பொழுதும் அதிகாலையில் கீழ்வானம் வெளுக்குமுன் துயிலெழுவது வழக்கமல்லவா! பிக்ஷுவும் வழக்கம்போல விழிப்படைந்தார். ஆனால் இரவின் அந்தகாரம் அப்படியே இருந்தது. குகையின் துவாரத்திலும் வெளிச்சமில்லை. அவர் புரண்டு படுத்து, மீண்டும் தூங்க முயற்சி செய்தார்.

அதிக நேரம் உறங்கிவிட்டோம் என்று அவருக்குத் தோன்றியது. அவர் தம் கண்களைத் திறந்து சுற்றிலும் பார்த்தார். ஆனால் இன்னும் இருட்டாக, மிக இருட்டாகவே இருந்தது.

அவருக்கு ஒன்றும் புரியவில்லை. இத்தனை நேரம் பொழுது விடிந்திருக்க வேண்டுமே! இன்னும் ஏன் எங்கும் இருள் சூழ்ந்திருக்கின்றது! எழுந்து, தட்டுத் தடுமாறிக் கொண்டு குகையின் வாயிலை நோக்கிச் சென்ற அவர் வாயிலிருந்து, ஆச்சரியமும் பயமும் கலந்த குரல் வெளிப்பட்டது.

குகையின் வாசல் நன்றாக மூடப்பட்டிருந்தது. கையினால் தடவிப் பார்த்தார். ஆம், அது ஒரு கற்பாறைதான். சுவரெழுப்பிக் குகையின் துவாரத்தை மூடினால் கூட அவ்வளவு நன்றாக மூட முடியாது. அப்படி அது மூடிக்கொண்டிருந்தது!

பிக்ஷு பயத்தினால் நடுங்கினார். எப்படி அந்தக் குகையிலிருந்து வெளிப்படுவதென்று தம் மூளை கடுக்க யோசித்தார். ஓர் இரவு ஆழ்ந்த நித்திரைக்குப் பிறகு அவருக்கு மிகத் தென்பாக இருந்தது. ஆனால் கூடவே மிகத் தாகமும் பசியும் ஏற்பட்டுவிட்டன. சுற்றுமுற்றும், மேலும் கீழும் பார்த்தார். எங்கும் ஓரே காரிருள்! விவரிக்க முடியாத அந்தகாரம்!

பயங்கரமான இருளடைந்த அந்தக் குகையின் தனிமை அவரை நிலை தடுமாறச் செய்தது.

"ஆண்டவனே! நான் கொடிய பாபங்களைச் செய்தேனா!" என்று முனகினார்.

தம் மடியிலிருந்த தீக்கல்லையும் குச்சியையும் எடுத்து, கீழே கிடந்த சருகுகளைத் திரட்டி, அவைகளுக்கு நெருப்பு வைத்து ஒரு சிறிய தீயை உண்டாக்கினார். மங்கலான அந்த வெளிச்சத்தில் தம்மைச் சுற்றிப் பார்த்தார். ஆகா! அது என்ன!

குகையின் துவாரத்தை ஒரு மலைச் சுவரே அல்லவா அடைத்துக் கொண்டிருந்தது! வெளிச்சம் புகக்கூட அதன் ஓரத்தில் இடமில்லை. அந்தச் சுவரில் கேலி செய்வதுபோலும், சவால் விடுவது போலும், கீழ்க்கண்ட வாக்கியம் எழுதியிருந்தது.

"பாவம் செய்த எவனும் இந்தக் குகையிலிருந்து வெளிப்பட முடியாது!"

தம் வாழ்க்கையைத் தாமே பாழாக்கிக் கொண்டிருந்ததை அப்பொழுதுதான் பிக்ஷு உணர்ந்தார். அவர் ஆன்மா "உன்னுடைய நாற்பது வருடச் சந்நியாசமும் வியர்த்தமே!" என்று கூறியது.

'வியர்த்தமா! நான் என்னமாதிரிக் குற்றம் செய்திருக்கிறேன்! கிரகஸ்தாசிரமத்தில் வேண்டுமென்றால் எப்பொழுதாவது ஒரு வேளை தவறி நடந்திருக்கலாமோ, என்னமோ! ஆனால் அப்படியும் குற்றம் செய்ததாக நினைவில்லையே! மேலும் நான் குடும்ப வாழ்வில் செய்த பாவம், நாற்பது வருடத் தூய்மையான சந்நியாசத்தினாலும் தவிர்க்க முடியாத அவ்வளவு கொடுமையானதா! எத்தனை புண்ணிய தீரங்களுக்குச் சென்றிருக்கிறேன்! என் கால்கள் வலியால் துடித்தபோதிலும், க்ஷேத்திர யாத்திரையை நான் நிறுத்தியதில்லையே! யோக நிஷ்டைகளாலும் பயிற்சிகளாலும், என் சரீரத்தையே மறந்து விட்டேனே! இன்றைக்கும் நான் கிடைக்கும் சிறிதளவு பிக்ஷையிலேயேதானே காலம் தள்ளுகிறேன்! ஒருவித ஆசையையும் என் மனத்தில் இதுவரை புக விடவில்லையே! அப்படியிருந்தும் நான் பாவியா! ......எளிய வாழ்க்கையும் தூய்மையான மனமும் அழிக்க முடியாத பாவமும் உலகத்தில் உண்டா!"

எவ்வளவு யோசித்தும் அவருக்கு ஒரு விடையும் கிடைக்கவில்லை.

பிக்ஷு நெருப்பை அணைத்துவிட்டு, கல்தரையில் உட்கார்ந்து பல சிந்தனைகளுக்குள்ளானார். இந்த அந்தகாரக் கூண்டு மனிதனால் செய்யப்பட்ட சிறைச்சாலையல்ல. மந்திரவாதியின் தந்திரமும் அல்ல. நிச்சயமாக இது கடவுளின் செயலே. அவனுடைய ஆணைக்குமுன் கேவலம் மனிதன் என்ன செய்ய இயலும்! அவனே துணை!

## 2

—அந்தக் 'கைதி' மறுபடியும் நித்திரையிலாழ்ந்தார். கனவில் மிகத் தேஜஸோடு கூடிய ஒரு தேவதை அவர் முன் தோன்றியது. அவர்களிருவருக்கும் கீழ்க்கண்ட சம்பாஷணை நிகழ்ந்தது:

"தேவா, நான் என்ன பாவம் செய்திருக்கிறேன்!"

"நீ பாவம் செய்யவில்லையானால், உனக்குச் சாந்தி கிடைத்து விட்டதா!"

"அந்தோ! எனக்கு இன்னும் சாந்தி கிட்டவில்லையே! சாந்தியைத் தேடி நாற்பது வருடங்களுக்கு முன் காஷாயம் அணிந்தேன். இன்னும் அதைத் தேடிக் கொண்டுதான் இருக்கிறேன். ஆனால்......"

"ஆனால் உன் ஆத்மாவில் மாசு படிந்திருக்கிறது. இல்லாவிட்டால் அது உன் கையில் பிடிபடாமல் எப்படி ஏமாற்றி விடும்!"

"ஐயா, தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மை."

பிக்ஷு மீண்டும் சிந்தனைக் குள்ளானார். ஆனால் தாம் செய்த பாவம் என்னவென்று மட்டும் அவருக்குப் பிடிபடவில்லை. தேவதை சொல்லிற்று:

"இங்கே பார். உன்னுடைய ஜீவனத்திற்காக நீ இதுவரை ஒரு வேலையும் செய்ததில்லை. அது பாவம். மகா பாவம்!"

"தேவா, அது பாவமானால் பூமியில் வேலை செய்து பிழைக்கும் பல கோடி மக்களும், பாவமற்றவர்களா!"

"இல்லவே யில்லை. அதில் பலபேர் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக, மற்றவர்களின் வாழ்வில் மண்ணைப் போடுகிறார்கள். அதனால் பின் சொல்லப்பட்டவர்கள் தங்களுடைய ஜீவனத்திற்காக உழைக்க வழியில்லாமலிருக்கிறார்

---

### பிடிக்க முடியாது!




காப்பிக் கொட்டையின் விலை நாளுக்கு நாள் ஏறிக்கொண்டு வருகிறது!

கள். இந்த இரண்டு பிரிவினர்களும், அதாவது வாழ்வைக் குலைப்பவரும், அவருக்கு இரையாகிறவரும் பாபாத்மாக்கள்தான்."

"அது எப்படி!"

"ஒரு உதாரணம் சொல்லுகிறேன், கேள். உன் வாழ்க்கையை நடத்துவதற்கு, உனக்குப் பத்து ரூபாய் (ஒரு தம்பிடிகூட அதிகமல்ல) வேண்டுமென்று வைத்துக் கொள். இது தெரிந்திருந்தும் உனக்காக நீ இருபது ரூபாய்களைச் சேர்த்தாயேயானால், அந்த அதிகப் பத்து ரூபாய்கள் வரையில் நீ மற்றவருடைய பங்கை அபகரிக்கிறவனாகிறாய். ஆனால் உனக்கு நியாயமாகத் தேவையான பத்து ரூபாய்களுக்குப் பதில், நீ ஐந்து ரூபாய் மட்டுமே சம்பாதித்தால், உன்னுடைய அசிரத்தையே மற்றவர்களை உன்னிடமிருந்து, உனக்குச் சேரவேண்டிய பாக்கி ஐந்து ரூபாய்களைப் பிடுங்கத் தூண்டுகிறது. நான் இதைத்தான் பாவம் என்று சொல்லுகிறேன். சந்நியாசியான நீ இதுவரை உன்னுடைய சொந்த உழைப்பினால் ஒரு தம்பிடிகூடச் சம்பாதிக்க முயற்சி செய்ததில்லை. மற்றவர்களுடைய உழைப்பினால் கிடைத்த பலனைக் கொண்டு நீ சாப்பிட்டு வருகிறாய்!"

"அப்படியானால், ஒரு துறவி பிக்ஷை கேட்பது பாவச் செயலாகுமா!"

"சந்தேகமென்ன! யாசிப்பது இரண்டு மடங்கு அதிகப் பாவமாகும். நீ முதலில் உழைப்பை இகழ்வது ஒரு பாவம். உன்னுடைய யாசகத்தன்மை, பிச்சை யிடுவதினால் தமக்குப் புண்ணிய மேற்படுகிறதென்ற மக்களின் மூட நம்பிக்கையை வளர்ப்பதற்கு ஏதுவாகிறது. இது இரண்டாவது பாவம். இதில் பாதிப் பங்கு உனக்கும் உண்டு."

"நான் இப்போது என்ன செய்ய வேண்டும்!"

"இந்த நிமிஷமே உழைத்துச் சாப்பிடுவதென்று உறுதிப்படுத்திக்கொள். நீ வெளியே செல்லக்குகையின்வாசல் தானாகத் திறந்து கொள்ளும்!"

"ஆகா, குகை தானாக வழிவிடுமா! ஆனால் என் பாவங்களுக்கு நான் இன்னும் ஈடு செய்யவில்லையே!"

"நான் கூறியபடி, நீ பாவத்தைப் போக்கச் சத்தியம் செய்து விட்டு அதன்படி நெறிதனவும் பிறழாமல்நடந்தாலே போதும். அதுவே நல்லது."

இதைச் சொல்லித் தேவதை மறைந்து விட்டது. தூக்கத்திலிருந்து பிக்ஷு திடுக்கிட்டெழுந்தார். மேற்குத் திசையை நோக்கி வேகமாய்ப் போய்க் கொண்டிருந்த மாலைக் கதிரவனின் கிரணங்கள் குகையைப் பிரகாசமாக்கிக் கொண்டிருந்தன. குகையின் துவாரம் விசாலமாகத் திறந்துகிடந்தது!

## 3

பிக்ஷு மறுபடியும் காட்டுப் பாதையில் பிரயாணமானார். தம் தேக உழைப்பினாலேயே தம் வாழ்க்கையை நடத்துவதென்று சபதம் செய்து கொண்டார். தமக்கு வேண்டிய குறைந்த அளவில் தூய்மையான எளிய வாழ்க்கையை நடத்துவதென்று விரதம் பூண்டார். மனதிற்குள்ளேயே கணக்குப் போட்டுப் பார்த்து, பிக்ஷுவான தன் தேவைக்குத் தினம் இரண்டு அணா சம்பாதித்தால் போதுமென்று தெளிந்தார். அந்த இரண்டு அணாவையும் எப்படிச் சம்பாதிப்பது!

வழியில் விறகு வெட்டிக் கொண்டிருந்த சில ஊழியர்களைப் பார்த்தார். தம்மையும் வேலை செய்யச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். ஆனால் அவர்கள் மறுத்தார்கள். 'சந்நியாசியை வேலை செய்யச் சொல்லலாமா! அது பாவமல்லவா!' என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் தங்களிடமிருந்த உணவைப் பகிர்ந்து கொள்ளும்படி பிக்ஷுவை வேண்டிக் கொண்டார்கள். பிக்ஷு அதை மறுத்துக் கூறிவிட்டுத் தம் வழியே சென்றார். விறகு வெட்டிகள் இந்தப் புதுமாதிரியான சந்நியாசியைப் பார்த்துச் சிரித்தார்கள்!

பிறகு பிக்ஷு பெரிய திருவிழா நடந்து கொண்டிருந்த ஒரு கிராமத்தை அடைந்தார். இங்கு தமக்கு ஏதாகிலும் வேலை கிடைக்கலாகாதா என்று எண்ணினார்.

ஒரு மூலையில் சக்கிலிகள் சிலர் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தனர். பிக்ஷு அவர்களருகே போய் உட்கார்ந்து கொண்டார். நல்ல வேளையாக அங்கே வருவதற்கு



முன்னால் முன் யோசனையுடன் தம்முடைய புனிதக் காஷாய ஆடையைக் கிழித்து தம் பையில் பத்திரமாக வைத்துக் கொண்டார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு ஒருவன் தன் செருப்பை அவரிடம் சரிபண்ணக் கொடுத்துச் சென்றான். பிக்ஷு பக்கத்திலிருந்த ஒருவனிட மிருந்து சிறிது நூலும் ஊசியும் வாங்கிக் கொண்டு அவன் எப்படித் தைக்கிறான் என்று கவனித்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு அதுமாதிரியே செருப்பைத் தைத்து முடித்தார்.

தைக்கக் கொடுத்தவன் வந்தவுடன் தாம் செய்த வேலைக்கு இரண்டு அணாக் கூலி கேட்டார். அவன் வழக்கம்போல முணு முணுக்காமல் அவர் கேட்ட இரண்டு அணாவைக் கொடுத்துச் சென்றான்.

இதைப் பார்த்த மற்ற சக்கிலிகள் அவரை நன்றாகத் திட்டினார்கள்.

"எட்டணாக் காரியத்தைச் செய்து விட்டு இரண்டு அணா வாங்கினாயே, என்ன வடிகட்டின முட்டாளடா நீ! நீ இங்கிருந்தாலே எங்கள் பிழைப்புக்கு ஆபத்துதான். போ, இங்கேயிருந்து உடனே!" என்று அவரை விரட்டினார்கள். பிக்ஷுவும்புன்னகையுடன் அங்கிருந்து கிளம்பினார்.

தம் கையிலிருந்த இரண்டணாவிற்குக் கொஞ்சம் சாதமும், தயிரும் வாங்கித் தின்றார். இரவு மரத்தடியில் இளைப்பாறப் படுத்தார்.

என்றுமில்லாத ஒரு அமைதி அவரை வந்தடைந்தது. அவர் ஆன்மாவின் ஆழத்திலிருந்து ஆனந்தம் பொங்கி யெழுந்தது. மறக்க முடியாத சாந்தி அவருடைய ஐம்புலன்களையும் ஆட்கொண்டது. அந்தத் தெவிட்டாத இன்பத்திலே அவர் தம் கண்களை மூடிக் கொண்டார். கனவில் தேவதையின் முகம் அவர் முன் தோன்றியது.

"இப்பொழுது சாந்தி கிட்டி விட்டதா, உனக்கு!" என்று கேட்டது.

"நாற்பது வருஷத் துறவில் காண முடியாத சாந்தியை, நான் ஒருவேளை உழைப்பில் கண்டு விட்டேனே! இது என்ன விந்தை, ஐயா! அப்படியானால் துறவு பூணுவது வீண் தானா!"

"ஒருவன் தனக்குத் தேவையான அளவு சம்பாதிப்பதே உண்மையான துறவு. தனக்குத் தேவையானதைவிட அதிகம் எவன் சம்பாதிக்கிறானோ, அவன் திருடனாகிறான். தேவைக்குக் கீழ் சம்பாதிக்கிறவன் பிச்சைக்காரனாகிறான். துறவு பூண்டவன் இந்த இரண்டிற்கும் நடுவிலிருக்கிறான். பூமியிலுள்ளவர்களெல்லோரையுமே மூன்று பிரிவினர்களாகப் பிரிக்கலாம். குடும்பஸ்தனாக இருந்த பொழுது நீ திருடனைப்போல் இருந்தாய். பிக்ஷுவாக இருக்கும்பொழுது பிச்சைக்காரனைப் போலிருந்தாய். இப்பொழுதுதான் நீ உண்மைத் துறவியானாய்" என்று சொல்லி விட்டுத் தேவதை அங்கிருந்து மறைந்தது.

அன்று துறவி உடனே எழுந்திருக்கவில்லை. என்றுமில்லாத அமைதியுடன் கீழ்வானம் வெளுக்கும் வரை ஆனந்த நித்திரையி லாழ்ந்திருந்தார்.

# கண் திறந்தது

கோமதி சுப்பிரமணியம்

"இலை போட்டாயிற்று. சாப்பிட வரவில்லையா!" என்று குரல் கேட்டும் கேளாதவன் போல் சிந்தனையில் மூழ்கியிருந்தான் ராமு. "என்ன, எடுத்து வைத்து விட்டேனே, வரவில்லையா!" என்று கேட்டுக் கொண்டே வந்த லலிதா கணவனின் நிலையைக் கண்டு திடுக்கிட்டுப் போய்த் திகைத்து நின்றாள்.

"எதற்காக இப்படி வேண்டாததையெல்லாம் இழுத்துப் போட்டுக் கொண்டு அவஸ்தைப்பட வேண்டுமாம்!"—அவள் கூறிய வார்த்தையில் சற்றுச் சூடேறிப் போயிருந்தது.

"எது வேண்டாதது! உடன் பிறந்த தம்பியின் நலனைக் கவனிப்பது வேண்டாத காரியமா!"

"கவனிக்க வேண்டியதுதான். ஆனால் அவர் அதை விரும்பினால்தானே!"

"விரும்புகிறானோ இல்லையோ, கவனிக்க வேண்டியது என் கடமை!"

"ஆமாம். கடமை, கடமை என்று இழுத்துப் போட்டுக் கொள்வதால்தான் இல்லாத அவமானமெல்லாம் வந்து சேருகிறது!"

"என் தம்பிக்காக நன்மை தேடுவதில் எனக்கு எத்தனை அவமானம் வந்தாலும் தாங்கிக் கொள்ளத் தயார்தான்."

"நீங்கள் தான் வேண்டுமென்று இழுத்துப் போட்டுக் கொள்கிறீர்கள். யாருடைய நலனைக் கோரி இத்தனை அவஸ்தைகளையும் தாங்குகிறீர்களோ, அவர் உங்களுக்குக் கொடுத்திருக்கும் சூடு மறக்கக் கூடியதா...!"

வாஸ்தவம்தான். சற்றுமுன் தம்பியிடமிருந்து வந்த கடிதம் மேஜையின் முன் பிரித்தபடி கிடந்தது. அதில் வரைந்திருந்த ஒவ்வொரு எழுத்தும் அவனைத் தாக்கி வரிந்திருந்ததோடு நிர்த்தாட்சிண்யமாய் அவனை ஒதுக்கியும் காட்டியிருந்தது. அப்படியிருந்தும் தம்பியின் நலனைக் கருதுவதில் சென்றிருந்தது ராமுவின் சிந்தனை முழுவதும்.

* * *

இந்தச் சிந்தனை இன்று நேற்று தொடங்கியதல்ல. தந்தை இறந்த காலத்திலிருந்தே, அதாவது ராமு குடும்பத்தின் தலைவனானதிலிருந்தே தம்பியின் நலனில் கண்ணும் கருத்துமாயிருந்தான். தாய் இரண்டென்றாலும் தகப்பன் ஒன்றுதானே! ஆகவே ராமுவுக்குச் சகோதர பாசம் பாலுவின்மீது அபரிமிதமாக இருந்தது. ராமுவுக்குப் பாலு சொந்தச் சகோதரனாக இருந்தால் கூட இத்தனை அக்கறை கொண்டிருப்பானோ என்னவோ, சந்தேகந்தான்.

"மாற்றாந்தாய் வயிற்றுப் பிள்ளை. அதனால் உருப்படியாக்காமல் விட்டு விட்டான்" என்று நாலு பேர் சொல்லுவார்களே என்பதற்காக மட்டுமல்லாமல் அவனையறியாது எழுந்த ஏதோ ஒரு பாசம் அவனைப் பாலுவோடு பின்னிப் பிணைத்திருந்தது.

தந்தை இறந்தபோது அரைகுறைப் படிப்பில் நின்றிருந்த பாலுவைச் சிரமப்பட்டு மேற்படிப்புப் படிக்க வைத்தான். பணம்தான் செலவழிக்க முடியும். ஆனால் படிப்பையுமா மண்டையில் புகுத்த முடியும்? அண்ணனின் அன்பை வியாஜமாகக் கொண்டு படிப்புக்கு மட்டம் போட்டான் பாலு. படிப்பது போல் பாவனை செய்வானே தவிர, அவன் மனமெல்லாம் எந்தக் கொட்டகையில் என்ன சினிமா நடந்து கொண்டிருக்கிறது, எந்தச் சபைக்கு யார் பாட வரப்போகிறார்கள் என்கிற சிந்தனையில்தான் சென்று கொண்டிருக்கும்.

பாலுவுக்குக் குழந்தை முதலே சங்கீதத்தில் ஆர்வம். தம்பியின் ஆர்வத்தைத் தெரிந்து கொண்டு படிப்பில் செலவழித்த பணத்தை நிறுத்தி விட்டுப் பாட்டில் செலவழிக்கத் தொடங்கினான் ராமு. ஆரம்பத்தில் அதில் அக்கறை காட்டிய பாலு அதிலும் பாதியில் காலை வாரி விட்டு விட்டான்.

எப்படியோ அவன் இஷ்டம் போல் போகட்டும் என்று கொஞ்ச நாள் அவனைப் பற்றிய அக்கறையே எடுத்துக் கொள்ளாமலிருந்தான். அக்கறை கொள்ளவில்லை என்றால் அவனைக் கவனிக்கவே இல்லை என்று அர்த்தமல்ல. அவன் கவனிக்காதது போல் இருந்து பிறர் மூலம் அவனைத் தன் வழியில் திருப்பும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். தன் சொல்லை மதிக்காததினால், தான் நேரடியாகப் பேச வேண்டாமென்று பிறர் மூலம் நல்வழியைப் போதித்துக் கொண்டிருந்தான்.

சொந்தச் சகோதரனின் பேச்சையே சட்டை செய்யாத பாலு பிறர் பேச்சையா மதிக்கப் போகிறான்! அவர்கள் சொல்வதையெல்லாம் ஒரு காதால் வாங்கி மறு காதால் விட்டு விட்டுத் தன் போக்கில் திரிந்து கொண்டிருந்தான்.

எந்த வகைக்கும் கட்டுப்படாமல் தன்னிச்சையாகத் திரிந்து கொண்டிருந்த பாலுவின் செய்கை ராமுவுக்குக் கஷ்டமாக இருந்தது. தம்பியைத் தன் அருகே இழுத்து வைத்துக் குடும்ப நிலைமை, அவன் வளர்ந்துவிட்ட பருவம், வேலை பார்க்க வேண்டிய அவசியம் இவைகளெல்லாம் பற்றி மணிக்கணக்காக உபதேசம் செய்வான். ஆனால் அவன் காதில் வாங்கிக் கொண்டால் தானே!

கடைசியில் ஒரு வகையாக முயற்சி செய்து பாங்குக் குமாஸ்தாவாக இழுத்து விட்டு விட்டான் பாலுவை. முதல் மாதச் சம்பளத்தைப் பாலு தன் கையில் கொண்டு வந்து கொடுத்தபோது பூரித்துப் போய்விட்டான் ராமு. இனி தனக்கும் தன் தம்பிக்கும் குறைவே இல்லை என்று இறுமாப்பில் தன்னை மறந்து விட்டான் ராமு. இதையெல்லாம் பார்த்துப் பெருமூச்சு விட்ட ஜீவன் ஒன்றிருந்தது.

பாலுவின் தாயாரான மீனாக்ஷிக்குப் பிள்ளை சம்பளத்தைத் தன் கையில் கொண்டு வந்து தராமல் அண்ணனிடம் கொடுத்தது அதிருப்தியை அளித்தது. ராமுவிடம் தாய் வேறு சிற்றன்னை வேறு என்கிற வித்தியாசம் இல்லை. ஆனால் மீனாக்ஷி நேர் மாறானவள். ராமு தன் சக்களத்தியின் பிள்ளை என்ற எண்ணம் அவள் அடிமனத்தில் ஆழப் பதிந்திருந்தது. காரியம் ஆகும் வரை அதாவது பாலு படித்து ஒரு வேலை என்று அமரும் வரை, ராமுவை விரோதித்துக் கொள்ளக் கூடாதென்பதற்காக வித்தியாசமில்லாதவள் போல் நடந்து வந்தாளே ஒழிய, அவள் உள்ளத்து உணர்ச்சிகளெல்லாம் அதற்கு நேர்மாறாக வேறு விதமாக உருவ மெடுத்திருந்தன.

'மகன் வேலைக்குப் போய்விட்டான். இனி இவன் தயவென்ன?' என்று எண்ணியவள் போல் பாலு வேலைக்குப் போன மூன்று மாதத்தில் குடும்பத்தைப் பிரித்துக் கொண்டு வேறாகப் போய்விட்டாள் மீனாக்ஷி. தன் மகன் சம்பாத்தியத்தை இவன் வாங்கிக் கொள்வதாவது என்கிற எண்ணம் உள்ளத்தே புரையோடிப்போயிருந்தது.

* * *

தனிக் குடித்தனம் போன இரு மாதத்தில் இருபதுரூபாய் மிகுதி வைத்து விட்டாள். 'இப்படியே மாதம் பத்து ரூபாயானால் வருஷத்திற்குக் குறைந்தது நூறு ரூபாயாவது மிச்சப்படுத்தலாமே! அதில்லாமல் ஒரே குடும்பமாக இருந்தால் ராமுதானே அந்தப் பணத்தையெல்லாம் எடுத்துக் கொள்வான்!' என்று எண்ணியவள் சாமர்த்தியமாகப் பிரிந்து வந்துவிட்ட தன் திறனை எண்ணிப் பெருமைப் பட்டுக்கொண்டாள். ஆனால் அந்தப் பெருமையெல்லாம் கொஞ்ச காலைக்குத்தான் நின்றது. மூன்று மாதம் முழுசாகச் சம்பளம் வாங்கினான் பாலு. நாலாவது மாதம் சம்பளம் வாங்க வேண்டிய நாளில் ஆளையே காணவில்லை. 'இன்று வருவான். நாளை வருவான்' என்று மகன் வரவை எதிர்பார்த்து ஏங்கி நின்றாள் மீனாக்ஷி.

தம்பி ஓடிவிட்டான் என்பதைக் கேள்விப்பட்ட ராமு பதறிவிட்டான். என்றாலும் மீனாக்ஷியைப் போய்ப் பார்த்துத் தேர்தல் சொல்ல மனம் துணியவில்லை. ஆயினும் அவள்தான் பெண் புத்தியால் பேதமையாக நடந்து கொண்டாள் என்றால் தானும் அப்படியே நடந்து கொள்வது சரியில்லை என்று எண்ணி மாதா மாதம் முதல் தேதி யன்று அவள் செலவுக்காகப் பணத்தை மட்டும் கொடுத்தனுப்பி விடுவான்.

சொந்த மகன் ஊரை விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விட்டாலும் மூத்தாள் மகனாவது இந்த மட்டும் செலவுக்குக் கொடுக்கிறானே என்கிறவரையில் அவளுக்குத் திருப்திதான். இருந்தாலும் ராமு மறுபடியும் தன்னோடு அழைத்து வைத்துக்கொள்ள வில்லையே என்கிற குறை அவளுக்கு இருக்கத்தான் இருந்தது.

* * *

ஒரு நாள் மீனாட்சிக்குப் பாலுவிடமிருந்து கடிதம் வந்தது. வந்த கடிதம் சாதாரணக் கடிதமல்ல. சினிமாவில் சேர்ந்து பெரிய சம்பளத்தில் அமர்ந்திருப்பதாகக் கண்டிருந்தது. மகனது உயர் பதவியில் பெருமை கொண்ட தாயார் மகனுடைய சங்கீதத் திறமையே அவனை அப்படி உயர்த்தி விட்டதென்று பெருமை அடித்துக் கொண்டாள். அதற்கு ஆதி காரணமாக சங்கீதத்தை வளர்த்து விட்ட ராமுவுக்கு எவ்விதப் புகழ் மாலையுமில்லை. புகழா விட்டாலும் இகழாமல் இருந்தாலே போதுமென்றிருந்தது ராமுவுக்கு.

'சினிமா வேலையில் என்றும் ஸ்திரமான பணமில்லை. அதை நம்பி உன் வேலையை விட்டு விட வேண்டாம். உடனே புறப்பட்டு வந்து வேலையை ஒப்புக் கொண்டு பழைய வாழ்க்கையை மேற்கொள்' என்று தம்பிக்குக் கடிதம் எழுதினான் ராமு. 'தனக்குத் திறனில்லா விட்டாலும்; பிறருடைய உயர்வைக் கண்டு ஏன் பொறாமைப் படுகிறாய்!' என்று அவனுக்குப் பதில் எழுதியதோடு திருப்தி அடையாமல் தாயாருக்கும் அதைப் பற்றி விரிவாக எழுதியிருந்தான் பாலு.



மீனாக்ஷியம்மாளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமா! 'என் பிள்ளை நல்ல நிலைமையில் இருப்பது இந்தப் பாவிப் பயலுக்குப் பொறுக்க வில்லையே! இவன் விளங்குவானா! இவன் வம்சம் விளங்குமா!' என்றெல்லாம் வாழ்த்தி வரம் கொடுக்கத் தொடங்கி விட்டாள்.

அவள் வார்த்தையைப் பொருட்படுத்தாமல் மீண்டும் தன் தம்பியின் க்ஷேமத்திலேயே கண்ணும் கருத்துமா யிருந்தான் ராமு. தன் சொல்லைக் கேட்டுப் பாங்கு வேலையை ஒப்புக் கொள்ளா விட்டாலும் எடுத்துக் கொண்டிருக்கும் வேலையிலாவது நிறைமையாகச் செய்து நல்ல பெயர் வாங்கச் சொல்லி அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அதோடு அவன் கல்யாண விஷயத்தைப் பற்றியும் அடிக்கடி தன் கடிதத்தில் குறிப்பிடத் தயங்க மாட்டான்.

பாலு உயர்ந்த சம்பளத்தில் வேலை பார்க்கிறான் என்று கேள்விப் பட்டவர்கள் அவனுக்குப் பெண் கொடுக்க முன் வந்தனர். சிலர் அதைப் பற்றி ராமுவிடமும் ஜாடை மாடையாகத் தெரிவித்துக் கொண்டார்கள்.

ராமு விஷயத்தை விவரமாக எழுதிப் பாலுவின் சம்மதத்தைக் கேட்டிருந்தான். அதற்குப் பாலு பதில் எழுதவில்லை. அதோடாவது நிறுத்திக் கொண்டிருக்கலாம். தன் தாயாருக்குக் கடிதம் எழுதிப் பெண் பேசி முடிக்க ஏற்பாடு செய்திருந்தான். அதைக் கேள்விப்பட்ட ராமு அவமானத்தினால் குன்றிப் போய் விட்டான். என்றாலும் சீக்கிரமே தன் சிதைந்த மனத்தைத் திருப்தி செய்து கொண்டு, 'எப்படியாவது பாலு வீடும் குடியுமாக ஆகி விட்டால் சரிதான். யார் பெண் பேசி முடித்தால் என்ன!' என்று தன்னைத்தானே சமாதானமும் செய்து கொண்டான்.

அதன் பிறகு அவன் கல்யாண விஷயமாகப் பாலுவுக்குக் கடித மெழுதுவதில்லையே தவிர, தாயார் எங்கே பெண் பார்க்கிறாள், என்ன ஏற்பாடு செய்கிறாள் என்பதை யெல்லாம் விசாரித்துக் கொண்டுதா னிருந்தான். அவன்தான் அப்படியென்றால் அவன் மனைவியும் அதற்கு ஒரு படி மேல் இருந்தாள்.

மாமியார் எங்கேயாவது பெண் பார்த்திருக்கிறாள் என்பது தெரிந்தால் அவளுக்குத் தெரியாமல் தானும் போய் அப்பெண்ணைப் பார்த்து வருவாள். பணத்திற்கு ஆசைப்பட்டுக் கொண்டு கோரமான பெண்ணையோ அல்லது தகுதி யில்லாத சம்பந்தத்தையோ மாமியார் கொண்டுவந்து விடக் கூடாதே என்பதுதான் அதற்குக் காரணம்.

* * *

மிட்டாதார் பெண்ணைப் பாலுவிற்கு நிச்சயம் செய்திருக்கிறார்கள் என்கிற பேச்சு மீனாக்ஷி எத்தனை மறைத்து வைத்தும் ஊரில் பிரசித்தமாகி விட்டது. விஷயத்தைக் கேள்விப்பட்ட ராமுவும் லலிதாவும் துடியாய்த் துடித்தார்கள்.

மிட்டாதார் பெண் கலியாணியை நன்றாகத் தெரியும் லலிதாவுக்கு. இருவரும் ஒன்றாகப் படித்தவர்கள். சிறு வயதிலிருந்தே அவள் பழக்க வழக்கங்களையும் உடல் கோளாறுகளையும் நன்கு அறிந்திருந்த லலிதா அவளைப் பாலுவின் மனைவியாக்கச் சம்மதிக்கவில்லை. ராமு எப்படியும் முயற்சி செய்து விவாகத்தைத் தடுத்துவிட வேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டான். விஷயத்தை விளக்கித் தம்பிக்குக் கடித மெழுதி விட்டுப் பெண் வீட்டாருக்கும் பெண்ணைப் பிடிக்கவில்லை என்று சொல்லி அனுப்பி விட்டான்.

ஏமாந்தவன் அகப்பட்டான் என்று சற்று நிம்மதி கொண்டிருந்த கலியாணியின் பெற்றோர் ராமுவினிடமிருந்து வந்த செய்தியைக் கேட்டு அதிர்ச்சியுற்றனர்.

'பேசிவிட்டு எப்படி மாறலாம்!' என்று மீனாக்ஷியைப் பிடித்துக் கொண்டார்கள் பெண் வீட்டார். வரவிருந்த பெரும் செல்வாக்கை ராமுவின் செய்கையால் இழக்க நேர்ந்துவிட்டதே என்கிற ஆத்திரத்தோடு, தான் பேசி முடித்த இடத்தை இவன் எப்படி வேண்டாம் என்று சொல்ல முடியும் என்கிற அகங்காரமும் கூடவே எழுந்தது மீனாக்ஷிக்கு. பெண் வீட்டாரிடம் வேண்டாமென்று சொன்னதோடு நிற்காமல் பாலுவுக்கும் ராமு பெண்ணைப் பற்றிக் கடிதம் எழுதியிருக்கிறான் என்பதையும் அறிந்து கொண்டாள்.

எப்படியும் இந்தக் கலியாணத்தை முடித்துவிட வேண்டுமென்கிற வைராக்கியத்தில் மகனுக்குக் கடிதமெழுதினாள் மீனாக்ஷி. 'தன்னைவிட உயர்வான இடத்தில் உனக்குப் பெண் கிடைக்கிறது என்கிற பொறுமையால் உன் அண்ணன் இல்லாததையெல்லாம் கற்பனை பண்ணிக் கடிதமெழுதியிருக்கிறான். அதைச் சிறிதும் நம்பாதே!' என்று குறிப்பிட்டிருந்தாள்.

அதை அப்படியே காப்பி பண்ணி அண்ணனுக்கு எழுதியனுப்பிவிட்ட பாலு, 'தான் அந்தப் பெண்ணைத்தான் மணக்கப் போகிறேன்' என்று தீர்மானமாக எழுதிவிட்டான். இந்நிலையில் ராமு என்ன செய்ய முடியும்!

இந்தக் களேபரத்தில் நல்ல மாதம் ஓடிவிட்டது. இடையே சூனியமாதம் பிறந்துவிட்டதால் அது முடிந்து மறு மாதத்தில் எப்படியும் அந்தப் பெண்ணையே முடித்துவிட வேண்டுமென்று தீர்மானம் செய்து வைத்திருந்தனர் பாலுவும் மீனாக்ஷியும்.

நல்ல மாதம் பிறந்தது.

மீனாக்ஷியும் பாலுவும் நல்ல நாளாகப் பார்த்துப் பெண் பார்க்கப் புறப்பட்டனர். அவர்கள் போன சமயம் பெண் வீட்டில் இல்லை. இவர்களைக் கண்டதும் பெண் வீட்டார் உற்சாகமாகப் பேசாமல் ஒருமாதிரியாக நடந்து கொள்ளவே, அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அக்கம் பக்கத்தில் விசாரித்தபோதுதான் உண்மை வெளிப்பட்டது.

பெண் டி. பி. ஆஸ்பத்திரிக்குப் போய் ஒரு மாதமாகிறது என்றும் இன்னும் ஆறு மாதம் அவள் அங்கிருக்க வேண்டும் என்றும் ஆஸ்பத்திரியை விட்டு வெளி வந்துதான் கலியாணமோ மற்ற விஷயமோ என்றும் சொன்னார்கள்.

அதைக் கேள்விப்பட்ட பாலு உண்மையிலேயே துடித்து விட்டான். அண்ணா கூறியது எத்தனை உண்மை என்பதாகத் தாயாரை நோக்கினான்.

பெற்ற தாயாராக இருந்தும் பிள்ளையின் நலனைக் கருதாமல் பணத்தைத்தான் பெரிதாக மதித்தாள் மீனாக்ஷி. ஆனால் ராமுவோ தம்பி தன்னை மதிக்கா திருந்தபோதும் தம்பியின் நன்மையை நாடினான். இருவரில் யாருடைய அன்பு உயர்வானது! தாயாரின் வீட்டை மிதிக்க மனமில்லாமல் அண்ணன் வீட்டை நோக்கி நடந்தான்.

தயங்கியபடியே படி யேறிய தம்பியை அன்பும் ஆர்வமும் ததும்ப வரவேற்றான் ராமு. வாத்ஸல்யம் ததும்ப நின்ற அண்ணனின் அன்புப் பார்வையின் முன் நிமிர்ந்து நிற்க இயலாத பாலு நாணித் தலை குனிந்தான். "அண்ணா, உண்மை அன்பை உணர முடியாதிருந்த என்னை மன்னித்துவிடுங்கள்" என்று கூறிய பாலுவின் கண்கள் கலங்கி நின்றன.

"பாலு, தவறுவது மனித சகஜம். அந்தவறிலிருந்து மீள முயலுவது தான் புத்திசாலியின் லக்ஷணம். நீ இந்த விவாகத்திலிருந்து......"

"விடுபட்டுவிட்டேன், அண்ணா. அதைச் சொல்லத்தான் ஓடோடியும் வந்தேன்" என்று கூறியவன், "அண்ணா! பெற்றவளாக இருந்தும் என்னை வஞ்சிக்கத் துணிந்த குற்றத்தை என்னால் மறக்கவே முடியவில்லை. அவள் ஒரு........." என்று குமுறினான்.

அந்தச் சமயம் எதிரே மீனாக்ஷி இருந்தால் அவள் கதி என்னவாகி யிருக்குமோ!

"குற்றத்தை ஒரேயடியாக அம்மா மீதே சுமத்திவிடாதே, பாலு. அவள் ஆதியில் கஷ்டப் பட்டவள். பெண்ணைப் பெற்றவர்கள் பணத்தைக் காட்டிச் சுலபத்தில் அவளை ஏமாற்றிவிட்டார்கள். அதற்காக அவளைக் குற்றம் கூறலாமா! நாம் தான்......" என்றான் ராமு.

"உம், ஒருவரைச் சொல்லியும் குற்றமில்லை. அண்ணன் ஒருவன் இருப்பதையே மறந்து, தான் தோன்றியாகத் திரிந்தேனல்லவா! என்னைத்தான் சொல்லிக் கொள்ள வேண்டும்! போகிறது. இப்பொழுதாவது என் கண் திறந்ததே, அதுவே என் பாக்கியம்!" என்று பாலு கூறியபோது உண்மையாகவே பெரும் பாக்கியத்தைப் பெற்று விட்டவன் போல் மகிழ்ச்சியடைந்தான் ராமு.




ஆசிரியர் : சுதர்சன் மொழிபெயர்ப்பு : ரா. வி.

## 12. படகு கவிழ்ந்தது!

சகோதரா! திருட்டுப் பட்டம் கட்டிய பிறகு நடக்க வேண்டியது நடந்தது. அதாவது என்மீது வழக்குத் தொடரப்பட்டது. நான் திருடன் என்று குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்ட பிறகு செய்தித்தாள்களுக்கு வேண்டிய விஷயங்கள் கிடைத்து விட்டன. புதுச் செய்தி எங்கே எப்பொழுது கிடைக்கப் போகிறது என்று கழுகாகக் காத்துக் கொண்டிருப்பவர்கள் அல்லவா இந்தப் பத்திரிகைக்காரர்கள்! என்னைப் பற்றிய தகவல் கிடைத்ததும் முதல் காரியமாக கொட்டை கொட்டையான எழுத்துக்களில் விதம் விதமான ஜன ரஞ்சகமான தலைப்புகள் கொடுத்து ஒன்றை ஒன்பதாக்கி இந்தச் செய்தியைப் பரப்பும் விஷயத்தில் பத்திரிகைகள் பிரமாதமாகக் கைங்கரியம் செய்தன. ஒரு பத்திரிகையாளன் என்னை நாகரிகத் திருடன் என்று நாகரிகமாகக் குறிப்பிட்டால் இன்னொருவன், இவன் கையில் கால் காசுகூட இல்லாத கபோதி என்று பறை சாற்றுவான். வேறு சில பத்திரிகைகள் இன்னும் ஒரு படி முன்னேறிவிட்டன. 'இவனுடைய தொழிலே இதுதான்!' என்று கண்டு பிடிக்க முடியாத பெரிய இரகசியத்தைத் தாங்கள் கண்டு விட்டது போல மூன் கூட்டியே தகவல்கள் தெரிவித்தன. இதுமட்டுமா? சில பத்திரிகைப் பிரதிநிதிகள் ஸ்டெலாவையே பேட்டி கண்டு பேட்டி விவரத்தைப் பிரசுரித்திருந்தனர். பத்திரிகைக்காரர்களுக்குக் கதை கட்டவா தெரியாது? என்னைப் பற்றி எனக்கே தெரியாத எத்தனையோ கதைகளைக் கனகச்சிதமாகக் கட்டி விட்டனர்.

ஸ்டெலா தன் மானத்தைக் காத்துக் கொண்டாள். ஆனால் என் மானத்தை வாங்கி எனக்குக் கெட்ட பெயர் சூட்டும் விஷயத்தில் எவ்விதமான சிறு குறையும்கூட வைக்கவில்லை. அவள் என் மானத்தைக் குழி தோண்டிப் புதைத்துவிடக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்க வேண்டும். அதனால்தான் அவள் பேட்டியின் பொழுது, "எனக்கு இந்த இந்தியனைத் தெரியவே தெரியாது. இதற்கு முன்னால் இவனை நான் எங்குமே பார்த்ததில்லை. இவன் திருடுவதற்காகவே என் அறைக்குள் வந்திருக்க வேண்டும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் இவனுக்கு என் அறைக்குள் வேறு என்ன வேலை?" என்று சொல்லியிருக்க வேண்டும். இவற்றைப் பத்திரிகைகளில் படித்துப் பார்த்தபொழுது எனக்குக் கண்களை இருட்டியது. காதுகளை அடைத்தது. உலகமே அதள பாதாளத்தில் அழுந்தி விட்டது போலத் தோன்றியது.

இவற்றை யெல்லாம் பார்த்த பொழுது 'நாம் விடுபடுவதற்கு வழி இருக்கிறது!'

என்று நான் கொண்டிருந்த கொஞ்சநஞ்ச நம்பிக்கையும் குறைந்து கட்டாயம் நமக்குத் தண்டனை கிடைத்தே தீரும் என்ற உறுதியான எண்ணம் உண்டாகி விட்டது. நான் உதவி வேண்டி எத்தனையோ ஆங்கிலேய நண்பர்களுக்குக் கடிதம் எழுதினேன். 'பெரியார்க்கு அழகு பேசாமல் இருத்தல்' என்ற கொள்கையைக் கைப்பற்றியோ என்னவோ, யாருமே இரண்டு வரி பதில் எழுதும் சிரமத்தைக்கூட ஏற்றுக் கொள்ளவில்லை. மேல் நாட்டு 'நட்பின் தன்மையே இத்தகையதுதான் போலும்!

ஆனால் ரூப்சந்த் இந்த இக்கட்டான நிலைமையிலும் கூட எனக்கு உதவிபுரிய முன் வந்தார். என்னை எப்படியோ ஜாமீனில் சிறையிலிருந்து விடுவித்து வீட்டுக்கு அழைத்து வந்தார். அதற்குப் பிறகு நான் அநேக நாட்கள் வரை அவரை அரை நிமிஷங் கூடக் கவலையற்று வீட்டில் உட்கார்ந்து பார்க்கவில்லை. இரவு பகல் எந்நேரமும் என் வழக்குக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் முழு மூச்சுடன் முனைந்திருந்தார். அவர் அந்த வழக்கில் அவ்வளவு தீவிரமாக ஈடுபட்டிருப்பதைக் காணும் பொழுது, 'வழக்கு என்மீது நடக்கிறதா? அல்லது இவர் மீது நடக்கிறதா?' என்ற சந்தேகமே என் உள்ளத்தில் எழலாயிற்று. தன்மீது வழக்கு நடந்தால்கூட ஒரு மனிதன் அவ்வளவு அக்கறை செலுத்தமாட்டான் என்றே தோன்றியது. அவரே வழக்குக்கான தஸ்தாவேஜுகளை வைத்துக் கொண் டிருந்தார். அவரே வாக்குமூலம் தயார்செய்து கொண்டிருந்தார். அவரேதான் சாட்சியங்களும் தயார் செய்துகொண்டிருந்தார். வக்கீல்களிடமும் அவரேதான் ஆலோசனைக்குப் போய் வந்தார். 'அவருடைய இந்த ஈடுபாடு என் உள்ளத்தில் சோம்பேறித்தனத்தின் விதையை விதைத்துச் சென்றது. நான் வழக்கைப் பொறுத்தவரை வெகு வெகு அலட்சியமாக இருக்கலானேன்.

வழக்கைப் பற்றிய கவலை எனக்கு இல்லாமற் போகவே, நான் நாள் முழுதும் தேவகியின் அருகிலேயே உட்கார்ந்திருக்கலானேன். அப்பொழுதுதான் எனக்கு அவளுடைய தன் மான உணர்ச்சியின் பெருமை தெரிய வந்தது. மேரி கொரிலி, ரெய்னால்ட்ஸ், விக்டர் ஹ்யூகோ, அலெக்ஸாண்டர் டூமாஸ் முதலிய ஆசிரியர்களின் நவீனங்களை அவள் படித்து நான் பார்க்கவில்லை. அவள் அவற்றைச் சிறிதும் விரும்புவதில்லை. அந்த நவீனங்கள் எல்லாம் அவளுக்கு நவீனங்களாகவே தோன்றுவதில்லை. அவள் ராமாயணமும் கீதையும்தான் படித்து வந்தாள். இந் நூல்களில் ரெய்னால்ட்ஸின் நவீனங்களில் வருவதுபோன்ற சுழற்சிகள் கிடையாது. டூமாஸின் நவீனங்களில் உள்ள சிக்கல்கள் காணக் கிடைப்பதில்லை.

ஆனால் மானிட வாழ்க்கையின் பரிசுத்தமான நோக்கங்களும் உயர்ந்த ஆதர்ச வாழ்க்கைக்கு வேண்டிய கோட்பாடுகளும் வரிக்கு வரி குறையா மணியாகக் குவிந்திருக்கின்றன. இதை யெல்லாம் தேவகி விளக்கிக் கூறவே, நான் வியந்து அயர்ந்து போய் விட்டேன். மேல் நாட்டு இலக்கியங்கள் அத்தனையும் எடுத்து வைத்தாற்கூட இந்த ஒரு ராமாயணத்துக்கு ஈடாக முடியாது என்ற முடிவுக்கு வந்தேன். மிக மிகத் துச்சமான பரமாணுவிலும் சிறிதான ஒரு பொருளைப் பகவான் சூரியனுக்கு ஈடாகச் சொல்ல முடியுமா? அதே போலத்தான் மேல் நாட்டு இலக்கியங்கள் அத்தனையும் அந்த ஒரு ராமாயணத்துக் கெதிரே நிற்க முடியாது என்று தோன்றிற்று. மிக மிகக் கியாதி வாய்ந்த ஆங்கில நூலாசிரியர்களின் மிக மிகச் சிறந்தவை என்று சொல்லப்படும் நூல்கள் எல்லாம் கூட அந்த ஒரு





ராமாயணத்துக்கு ஈடு இணையாக இருக்க முடியாது என்று நான் துணிந்து கூறுவேன்.

பாரத தேசத்தில் இது போன்ற உயர்ந்த நூல்கள் இருக்கக் கூடும் என்ற எண்ணமே இதுகாறும் என் உள்ளத்தில் எழுந்ததில்லை. தேவகிக்குச் சீதாதேவியின் வாழ்க்கைச் சரித்திரம் மிக மிகப் பிடித்திருந்தது. சீதாதேவியின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே அவள் கண்களில் நீர் கோத்து நிற்கும். கற்புக்கரசி சீதாதேவி பட்ட துன்பங்களை நினைத்தால் யாருக்குமே கண்களில் நீர் வருவது இயல்புதானே? ஆனால் தேவகியிடம் இன்னொரு விஷயமும் இருந்தது. அவள் வெறுமனே நூல்களைப் படிப்பது மட்டும் இல்லை. படிப்பதில் நல்லவற்றைத் தன் வாழ்க்கையிலும் மேற்கொண்டு அதன்படி நடக்க முயன்றாள். சொல்லும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டும் என்று உபதேசம் செய்யும் பெரியார்கள் எங்கும் உண்டு. ஆனால் அதைக் கடைப்பிடிக்கும் பெரியார்களைக் காண்பதுதான் துர்லபம்.

தேவகி மிகவும் அடக்கமானவள். இனிய சுபாவம் படைத்தவள். தூய்மையான இருதயம் உள்ளவள். நற்குணங்கள் பல பொருந்தியவள். ஊக்கமே உருவானவள். இவையெல்லாம் சேர்ந்து அவளுக்கு அலாதிக் களையை அளித்திருந்தன. அவள் முகத்தில் தேஜஸ் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவளைக் காணக் காண எனக்கு இந்தியாவின் மீது அபார அபிமானம் உண்டாயிற்று. 'பாரதநாடு பழம் பெருநாடு' என்ற பெருமை உணர்ச்சி என் உள்ளத்தில் தானாகவே தலைதூக்கி நிற்கலாயிற்று.

நான் முன் செய்த தீச் செயல்களை நினைவுறுத்தி அவள் ஒரு வார்த்தையென்றால் ஒரு வார்த்தை கூட என்னிடம் ஏதும் குறை கூறியதில்லை. நான் செய்துள்ள தவறுகளைக் கணக்கிட்டுக் கூறியதில்லை. இம்மாதிரி முன் செய்த தவறுகளை எடுத்துக் காட்டி மனத்தைப் புண்படுத்த முயல்வது நாகரிகத்துக்குப் புறம்பான, மனிதத் தன்மைக்கு மாசு கற்பிப்பதான விஷயம் என்று அவள் எண்ணி வந்தாள். நான் அவளுடன் நெருங்கிப் பழகப் பழக, அவளுடைய தூய்மையின் பெருமையை உணர்ந்தேன். அவள் பரிசுத்தமானவள், தூய்மையே உருவானவள் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வலுப் பெற்றது. அவளுடைய காலடிகளில் விழுந்து பணிந்து, 'அம்மா, தாயே!' என்று கதறிப் பூர்வ ஜன்ம பாவங்களுக்கெல்லாம் மன்னிப்புக் கோர வேண்டும் என்று என் இருதயத்தின் ஆழத்தில் ஏதோ ஒன்று கூறியது. அவளை நான்



பெண் அல்ல; பெண் உருவத்தில் வந்த தெய்வம் என்றே எண்ணினேன். அவளுடைய தூய்மையான தாய் அன்பு என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது.

நண்பா! வழக்கு முடிந்து அதன் தீர்ப்பு வெளியாயிற்று. ரூப் சந்தின் இடைவிடாத முயற்சியும் சலியாத உழைப்பும் வீண் போகவில்லை; நற்பலனையே அளித்தன. தீர்ப்பு எனக்குச் சாதகமாக முடிந்து நான் விடுபட்டேன். அதுமட்டும் அல்ல; ஸ்மூலாவின் மீது எதிர் வழக்கு வேறு தொடரப்பட்டது. அவன் கண்யமான ஒரு மனிதனுக்கு மான நஷ்டம் உண்டு பண்ணிவிட்டான் என்பதற்காக அவனுக்கு இருபத்தைந்து பவுன் அபராதமும் விதிக்கப்பட்டது. அப்பப்பா! இப்பொழுது நினைத்தாலும் எனக்கு வியப்பாயிருக்கிறது, என் தன்மானத்தின் பெருமானம் இருபத்தைந்து பவுன்தான் என்பதை நினைக்கும்பொழுது! என்ன நியாயம்! என்ன தீர்ப்பு! ஆகா! மானத்தைப் பணம் கொண்டு மீட்டுவிடலாம் போலும்!

ஆனால் அதே நான் இந்தியனாக மட்டும் இல்லாமல் ஆங்கிலேயனாக இருந்திருந்தால் எதிர் வழக்கின் தீர்ப்பு இப்படியா இருந்திருக்கும்? ஸ்மூலாவுக்கு மானம் என்று ஒன்று இருந்தால், அது கப்பலேறும்படியான சிறைத் தண்டனையல்லவா கிடைத்திருக்கும்? அவனுடைய சொத்தின் பெரும் பகுதி அபராதமாக விதிக்கப்பட்டிராதா?

என் பொருட்டுச் சிரமத்தைச் சிரமமாகப் பாராட்டாமல் பாடுபட்ட ரூப்சந்துக்கு நான் என் வந்தனங்களைத் தெரிவித்தேன். அவர் செய்த நன்றிக்கெதிரே என் வந்தனம் எம்மாத்திரம்? வாயால் வந்தனம் என்று சொல்லிவிட்டால் ஒருவர் செய்த உபகாரத்துக்குப் பிரதி செய்து விட்டதாகுமா? இல்லாததற்கெல்லாம் வாய் வந்தனம் செலுத்தும் இந்த மேல் பூச்சு நாகரிகம் இந்தியாவைச் சேர்ந்ததல்ல; மேல்நாட்டுச் சரக்குத்தான். அந்தரங்க சுத்தியுடன் அல்லவா செய் நன்றி கொல்லாமல் இருக்க வேண்டும்?

எனக்கும் ரூப்சந்துக்கும் எந்தவிதமான உறவும் கிடையாது. பந்தமும் கிடையாது. நான் யாரோ, அவர் யாரோ? ஆனால் நான் இந்தியன் என்ற ஒரே காரணத்துக்காக, உறவுக்காக அவர் என் பொருட்டு இந்தப் பேருபகாரத்தைச் செய்தார். இந்தியன் என்ற இந்த உறவு இருக்கிறதே, இது ரத்த சம்பந்தம், கட்டு என்ற எல்லா உறவுகளையும்விட எவ்வளவோ உறுதியானது, மேலானது. இது தாய் நாட்டின் தொடர்பு. பிறந்த நாட்டின் பண்பு. இந்தத் தொடர்பைப் பற்றி இதைவிட வேறு என்ன சொல்ல முடியும்!

என் உள்ளத்தில் கணவன் மனைவி இருவரிடமும் நன்றி உணர்ச்சி குடி கொண்டது. அந்தத் தம்பதிகளிடம் எனக்குப் பெருமதிப்பு ஏற்பட்டது. இருவரும் மனித உருவத்தில் அவதரித்த தெய்வங்களாகவே என் கண்களுக்குத் தோற்ற மளித்தனர். நான் இருவரையும் வழிபடும் தெய்வங்களாக மதித்து என் உள்ளக் கோவிலில் இருவருடைய உருவங்களையும் பிரதிஷ்டை செய்து பூஜிக்கவே தொடங்கி விட்டேன். மனிதர்கள் இவ்வளவு தன்னலமற்றவர்களாகவும் நேர்மையானவர்களாகவும், இனிய சுபாவம் படைத்தவர்களாகவும் இருக்கக்கூடும் என்ற எண்ணமே என் உள்ளத்தில் இதுகாறும் எழுந்ததில்லை. அவர்கள் கடை வீதி வழியே போய்க் கொண்டிருப்பதைக் காணும் பொழுது காக்கைக் கூட்டத்திலே இரண்டு ராஜ ஹம்சங்கள் அன்ன நடை போட்டுக் கொண்டு நடந்து செல்வது போல எனக்குத் தோன்றும்.

வர வர எங்கள் தொடர்பு மிகவும் நெருக்கம் உற்றது. முன்பெல்லாம் அவர்கள் என் வீட்டைத் தேடி வந்து கொண்டிருந்தார்கள். இப்பொழுதோ, நான் அவர்களுடைய வீட்டைத் தேடிப் போகலானேன். ஒரு நாள் அவர்கள் வீட்டுக்குப் போய் அவர்களைச் சந்திக்கவில்லை யென்றாலும் என் மனம் என்னவோபோலாகி விடும்; வெறிச்சோடி விடும். மிக முக்கியமான கடமைகளில் ஒன்றைச் செய்யத் தவறி விட்டதாக எண்ணி நான் மிகவும் மனம் புழுங்குவேன். என் நிலைமை மட்டும் தான் இப்படி ஆகி விட்டது என்பதில்லை. அவர்களுடைய நிலைமையும் என்னுடைய நிலைமையைப் போலவேதான் ஆகிவிட்டது. அவர்கள் என்னைத் தங்கள் வீட்டு மனிதர்களில் ஒருவனாக மதித்தனர். எந்தச் சிறிய விஷயத்துக்கும் என்னிடம் ஆலோசனை கேட்டனர். நாட்கள் செல்லச் செல்ல எங்களுடைய ஆந்தரிகத் தொடர்பு வலுவுற்று நாங்கள் பிரிக்க முடியாதவர்களாகவே வாழலானோம்.

ஒரு நாள் நானும் தேவகியும் உலாவச் சென்றோம். ரூப்சந்த் ஏதோ வேலை இருக்கவே எங்களுடன் உலாவ வரவில்லை. வான வீதியிலே மேகக் கூட்டங்கள் மிதந்து கொண்டிருந்தன. தேவகி அடிக்கடி வான வீதியை அண்ணாந்து பார்க்கலானாள். மழை வந்து விட்டால் என்ன செய்வது என்று ஒரு வேளை அவள் பயந்தாளோ, என்னவோ! ஆனால் நான் அதை யெல்லாம் சிறிதும் பொருட்படுத்தவில்லை. ஒரு படகை வாடகைக்குப் பேசிக் கொண்டு ஏறி உட்கார்ந்தேன். தேவகியும் தயங்கியவாறே ஏறி உட்கார்ந்தாள். படகு சமுத்திரத்தைச் சுற்றி வரப் புறப்பட்டது. தேவகி மனத்துள் கரட்டு ஓணானை விழுங்கிக் கொண்டிருந்தாள். ஆனால் வாய் திறந்து தன் மனத்தில் உள்ளதை என்னிடம் சொல்லவில்லை. நான் கோபித்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது என்று அவள் பயந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

கடலில் உல்லாசப் பிரயாணம் செய்யும் ஆவலில் நானும் அவளைக் கிண்டிக் கேட்க



# உபசாரத்திற்கு உகந்தது

ஹேமா:- ஏன் மாமி, நேத்திக்கு ஒரு பெரியவர் ஒங்க வீட்டிற்கு வந்திருந்தாரே...அவரை சும்மா சௌக்கியமான்னு கேட்டுட்டு அனுப்பிட்டேளே...சாப்பிட ஏதாவது கொடுத்து உபசாரம் பண்ணியிருக்கக்கூடாதா......

பிரேமா:- இப்போ சாமான் விக்கிற விலையிலே 'டிபன்' பண்ணலாம்னு முடியல்லே...சரி, வேறு ஏதாவது தரலாம்னு பார்த்தேன், ஆனா அவருக்கு அவசரமா போக வேண்டியிருந்ததனாலே அது எல்லாம் தயார் பண்ணறமட்டும் இருக்க முடியாதுன்னு சொல்லிட்டார்.

ஹேமா:- ஏன்...பேசாமே ஒரு டம்பிளர் 'டீ' கொடுத்திருக்கலாமே ...'டீ'யை எவ்வளவு சீக்கிரம், எவ்வளவு சுலுவில், எவ்வளவு சிக்கனமாக தயாரிக்கலாம்!

பிரேமா:- ஆமாம்......உபசாரத்துக்கு உகந்தது 'டீ' தான்.

## மந்திர சக்தியுள்ள 'டீ'யைக் குடியுங்கள்.



சென்ட்ரல் டீ போர்டாரால் வெளியிடப்பட்டது.

வில்லை. எங்கள் படகு கடல் அலைகள் மீது ஆடி அசைந்த வண்ணம் முன்னேறிக் கொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் நாங்கள் வானத்தைப் பார்ப்பதை மறந்து கடல் அலைகள் செய்யும் கிரீடைகளைக் கண்டு ரசிப்பதில் மூழ்கி விட்டோம். ஆழ் கடலின் அலைகள் ஒன்றை யொன்று பிடிக்கத் தாவி ஓடி வரும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. ஒரு அலை இன்னொரு அலையைப் பிடிக்க நெருங்கியதும் இரண்டு அலைகளும் கெக்கலி கொட்டிச் சிரித்துக் கலந்து போகும் காட்சியும் கண்களுக்குக் குளுமையை அளித்தது. உயரமாக எழும்பும் அலைகள் உடையாமல் நெளிந்து நெளிந்து வரும் பொழுது அவை எதையோ வாரிச் சுருட்டிக் கொண்டு வருவது போன்ற பிரமை உண்டாயிற்று. கடல் அலைகளைப் பற்றிய கற்பனைக் காட்சிகளில் எவ்வளவு நேரம் போயிற்றோ, எனக்குத் தெரியாது. இயற்கை இன்பத்தைப் பருகத் தொடங்கி விட்டால் பொழுது போவது தெரிவது ஏது? நாங்கள் கரையிலிருந்து வெகு தூரம் கடலுக்குள்ளே சென்று விட்டோம்.

திடீரென்று தடித் தூற்றல்கள் இரண்டு ஒன்று மேலே விழுந்தன. அடுத்த கணம் 'பட பட' வென்று மழையே வந்து விட்டது. தன்னை மறந்து நல்ல நித்திரையில் ஆழ்ந்திருப்பவர்கள் மீது 'பட பட' வென்று மழை கொட்ட வாரம்பித்து விட்டால், எப்படித் துணுக்குறுவார்கள்? அதே போல நாங்கள் திகிலடைந்தோம். எங்கள் கண்கள் எங்களை யறியாமலே கரையை நோக்கின. வந்திருக்கும் தூரத்தை அநுமானித்த பொழுது எங்கள் இருதயமே இடிந்து உட்கார்ந்து விட்டது. 'இனி என்ன செய்வது? எப்படிக் கரை சேருவோம்?' என்று கவலையுடன் சிந்திக்கலானோம்.

காற்று வேறு கன கடுமையாக வீசத் தொடங்கியது. காற்று திசைமாறி அடிக்கவே படகோட்டியின் பாடு திண்டாட்டமாகி விட்டது. அவன் படகைக் கரை சேர்க்கச் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாகிக் கொண்டிருந்தன. அவன் என்ன செய்தும் படகைக் கரைப் பக்கம் ஓரடி கூட ஓட்ட முடியவில்லை. படகைக் கவிழ்க்கப் பயங்கரக் கர்ஜனை புரிந்து கொண்டு காற்றின் உதவியோடு முன்னேறி வரும் கடலின் பேரலைகளுக்கு எதிரே அவன் என்னதான் செய்வான்? ஆயினும் உயிரின் மீதுள்ள ஆசை அவனைச் சும்மா ஓய்ந்திருக்க விடவில்லை. ஆனால் அவன் முயற்சி பலிதம் அடையாமல் போவதைக் கண்ட நான் கதிகலங்கிப் போய் விட்டேன். என்ன செய்வது என்று புரியாமல் நடுநடுங்கிக் கொண்டிருந்தேன்.

ஆனால் தேவகியின் முகத்தில் பதற்றமோ, கலக்கமோ, நடுக்கமோ ஏதும் இல்லை. அவள் அந்த ஆபத்தான நேரத்திலும், தன் வீட்டில் இருந்தால் எவ்வளவு ஆனந்தமாகவும் சந்தோஷமாகவும் இருப்பாளோ, அப்படியே மகிழ்ச்சி ததும்பும் வதனத்துடன் உட்கார்ந்திருந்தாள். இந்த இக்கட்டான நிலைமையில் இவள் எப்படித்தான் இப்படிக் கவலையின்றி உட்கார்ந்திருக்கிறாளோ என்று கவலையுடனும் வியப்புடனும் அவளைப் பார்த்தேன். "இனி பதற்றமுற்றுப் பயந்து சாவதனால் என்ன பயன்? நடப்பது நடக்கட்டும். 'உரலில் தலையைக் கொடுத்த பின் உலக்கைக்குப் பயந்தால் முடியுமா?' என்று இந்தியாவில் ஒரு பழமொழி உண்டு. ஆகவே, நடப்பது நடக்கட்டும் என்று கடவுள்மேல் பாரத்தைப் போட்டுவிட்டுக் கையைக் கட்டிக் கொண்டு கடவுளைத் தியானித்தவாறு இருந்தால் கடவுள் கரை சேர்த்து விடுவார்!" என்றாள் மிகவும் சாந்தமான குரலில்.

என் உள்ளத்தில் அம்பைப் பாய்ச்சியது போலிருந்தது. 'இவளோ ஒரு பெண். ஆனால் இந்தப் பயங்கரப் புயலிலும் பயம் இன்றி அமைதியாக, சாந்தமே உருவாக உட்கார்ந்திருக்கிறாள். ஆனால் நாமோ ஆண். ஆயினும் நமக்கு இப்படி மனம் பதறுகிறதே, என்ன காரணம்? இருவருடைய இருதயத்துக்கும் அடித் தளத்தில் என்ன சக்தி வேலை செய்து கொண்டிருக்கிறது? அவள் பயத்தை ஒழித்து இருப்பானேன்? நான் பயந்து சாவானேன்?' என்று யோசித்தேன்.

ஆம், அவளுக்குக் கடவுளின் மீது நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கை எனக்கு இல்லை. இதுதான் காரணமாயிருக்க வேண்டும் என்று எண்ணினேன்.

சகோதரா! மேல் நாடு இவ்விஷயத்தில் கடவுளிடம் பராமுகமாயிருக்கிறது. மேல் நாட்டவன் தன் புஜ பலத்தை நம்பி வாழ்கிறான்; தன் புத்தி பலத்தை நம்பி வாழ்கிறான். ஆனால் ஆண்டவனை நம்புவதில்லை. ஆண்டவனை நம்பி வாழ்வது முட்டாள்தனம் என்றுகூட நினைக்கிறான். ஆண்டவன் மீது தங்களை ஒப்படைத்து விட்டுக் கீழ் நாட்டவர் கவலையின்றிச் சாந்தமாக வாழ்கிறார்கள். மேல் நாட்டவன் தன்னைத்தானே நம்பிப் பயந்து சாகிறான். கடவுளை நம்பும் கீழ் நாட்டவன் கவலைப் படுவதில்லை. இதுதான் இதன் ரகசியமாயிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

இதே சமயம் படகு ஒரே ஆட்டமாக ஆடிற்று. என் மனமும் அச்சமயம் அந்தப் படகைப் போலவே ஆடத் தொடங்கியது. தேவகி தன்னை ஆண்டவனின் கையில் ஒப்படைத்து விட்டு அமைதியாக உட்கார்ந்திருந்தாள். ஆனால் என்னிடத்தில் அந்தச் சக்தி இல்லை. நான் நீரையும் அதில் எழும்பும் பயங்கரப் பேரலைகளையும் பார்த்துக் குலை நடுக்கமுற்றுக் கொண்டிருந்தேன். அலைகளின் உருவத்தில் மரணம் நெருங்கிவிட்டதாகவே எண்ணிப் பயத்துடன் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இதற்குள் திடீரென்று ஒரு பேரலை எழுந்து எங்கள் படகைக் கவிழ்த்து விட்டது.

**(தொடரும்)**

# மரக்கால் மன்னார்சாமி

கோ. சு. நாதன்

மனோரஞ்சித சர்க்கஸ் கம்பெனிக்காரர்கள் ஏற்கெனவே தங்கள் அபூர்வத் திறமையினால் மக்கள் மனத்தைக் கவர்ந்திருந்தார்கள். ஆகாச பார், அந்தர் தியான வித்தை, கத்தி வீசு, கயிற்று டான்ஸ் எல்லாமே மனோரஞ்சித சர்க்கஸ் கம்பெனியில் பிரமாதமான காட்சிகளாக இருந்தன.

ஒரு நாள் காலையில், நகர மெங்கிலும் பெரிய பெரிய எழுத்துக்களில் சர்க்கஸ் கம்பெனியின் புது விளம்பரம் ஜனங்கள் கண்களைத் தாக்கியது. "இந்த ஊர் முகாம் இன்னும் மூன்று நாட்கள்தான்! இன்று மாத்திரம் 'மரக்கால் மன்னார்சாமி' பல அபூர்வமான சைக்கிள் வித்தைகளையும், கம்பி மேல் நடக்கும் கஷ்டமான வித்தையையும் செய்து காண்பிப்பார். மரக்கால் மன்னார்சாமி பின்புறமாகவே, சாய்வான கம்பியில் ஏறி, மேலிருந்து சரிந்துவிழும் காட்சி மனோரஞ்சித சர்க்கஸ் கம்பெனிக்கே பெருமையளிக்கும் செய்கை. இன்றைக்கு நீங்கள் விஜயம் செய்யாவிட்டால் வாழ்நாளிலேயே ஒரு அரிய சந்தர்ப்பத்தை இழந்தவர்களாவீர்கள்" என்ற விளம்பரம், பங்களா காம்பௌண்டுச் சுவரிலிருந்து சிறு பாலங்களின் கைப் பிடிச் சுவர் வரை அலங்கரித்தது.

பொது ஜனங்கள் மேற்படி விளம்பரத்தை ஒரு தடவை வாசித்துப் பார்த்தார்கள். இரண்டு தடவை வாசித்துப் பார்த்தார்கள். உடனே மூக்கின்மீது விரலை வைத்தார்கள்! 'ஒரு மரக்கால் ஆசாமி, கால் நொண்டியாகப் போய், பொய்க்கால் வைத்துக் கொண்டிருப்பவன், ஊனமாகப் போய் காலின் உணர்ச்சியை இழந்து மரத்தினால் கால்களை செய்து மாட்டிக் கொண்டிருப்பவன், இத்தகைய அபூர்வ வித்தைகளைச் செய்யும்போது, அதைப் பார்க்காத ஜன்மம் என்ன ஜன்மம்?' என்று அந்த விளம்பரங்களைக் கண்ட ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே கேட்டுக் கொண்டனர். அன்று மாலை ஐந்து மணிக்கே சர்க்கஸ் கொட்டகை வழக்கத்தைவிட அதிகமாக மூன்று பங்கு நிரம்பி விட்டது.

சர்க்கஸ் ஆரம்பமாயிற்று. ஜனங்கள் பொறுமையைப் பரிசோதிப்பது போல் இடைவேளை வரை மிருகங்கள் வித்தைகளையே காண்பித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவாறாக இடைவேளை முடிந்தவுடன் 'டிப்டாப்'பாக மேல்நாட்டு உடையில் மரக்கால் மன்னார்சாமி அரங்கத்தில் ஆஜரானான். "இதோ மன்னார்சாமி! இதோ மன்னார்சாமி!" என்று ஒலி பெருக்கிகள் அலறின. அவனுடைய ராஜ கம்பீர நடையைப் பார்த்த பிறகு, அவன் மரக்கால் மன்னார்சாமியாக இருக்க முடியும் என்று யாராலும் சொல்ல முடியாது!

அனாயசமாக ஒரு சைக்கிளை, சிப்பந்தி ஒருவனிடமிருந்து வாங்கி, ஜம் என்று ஏறி உட்கார்ந்தான். கண் மூடித் திறக்குமுன் அசுரவித்தைகள் காண்பிக்க ஆரம்பித்தான். கைகளை உபயோகிக்காமலேயே அவன் சைக்கிளைப் பல கோணல்களில் ஓட்டித் தான் ஒரு நிபுணன் என்று நிரூபித்தபோது ரசிகர்கள், கோடை இடிபோல் கை தட்டி ரசித்தார்கள்.

சைக்கிளைத் தூர எறிந்துவிட்டு, கம்பி மேல் நடக்கும் வித்தைகளைக் காண்பிக்க ஆரம்பித்தான். என்ன லாவகம்! என்ன பாலன்ஸ்! அகலமான தார் ரோட்டில் ஆனந்தமாக நடக்கும் அனாயாசத்துடன் அவன் அந்த மயிரிழைக் கம்பியில், நடந்து, ஓடி, எல்லாம் காண்பித்தான். மறுபடியும் கைதட்டல் கொட்டகையைப் பிளந்தது.

"சார்! மரக் காலினால் இப்படிச் செய்வது மகா அபூர்வமாக்கும்!" என்றார் ஒரு நாற்காலி பிரமுகர். "சரி! இந்த மன்னார்சாமிக்கு மரக் காலாயிருக்கிறது என்று நீங்கள் பார்த்தீர்களா?" என்றார் இன்னொரு பிரமுகர்.

காலரியிலும் கசமுச வென்று பேச்சுக் கிளம்பியது. "இவன் மரக் கால் உள்ளவனே யில்லை! பொய், ஏமாற்று வித்தை!" என்று உறுமினார் ஒரு மீசைக்காரர். "ஆமாம்! அண்ணே! நீ சொல்லுவது நிஜமாத்தான் இருக்கும்!" என்று ஆமோதித்தார் அவர் பக்கத்திலிருந்த அரை மீசை ஆசாமி!



"பாகவதர்வாள், நீங்கள் ஏன் இப்பொழுதெல்லாம் முன் போல் அடிக்கடி கச்சேரி பண்ணுவதில்லை?"

"அதுவா? என்...... உடம்பு சரியில்லையே என்றுதான்!"

"உங்கள் உடம்புக்கு என்ன?"

"எனக்கு உடம்பு ஒன்றுமில்லை, ஸார்! என்னுடைய ரஸிகர்களைப் பற்றியல்லவா சொன்னேன்!"

"இந்த மானேஜர் மண்டையை உடைத்து விட மாட்டேனு? வா தம்பி! விஷயத்தைக் கேட்டு விடலாம்!" என்று இரைந்து கொண்டே அரை மீசை பின் தொடர முழு மீசைக்காரர் முன்னேறினர்.

அடுத்த நிமிஷத்தில் "ஏய்! மானேஜர்!" என்ற மீசைக்காரர்களின் சத்தம் கொட்டகை எங்கும் எதிரொலித்தது. ஜனங்களெல்லோரும் சத்தம் வந்த திசையை நோக்கி மூச்சுக் கூட விடாமல் பார்த்தார்கள்.

இதைப் போல் எத்தனையோ கலாட்டாக்களைக் கண்டு பழக்கப் பட்டிருக்கும் மானேஜர் மனோஹரன் அலட்சியமாகத் தம் ஜிஜார்ப் பைக்குள் கை விட்ட வாறு "என்னய்யா கூச்சல்? ஏன்?" என்று வந்தார். மரக்கால் மன்னார்சாமி ஆகாயத்தில் நிற்பது போல் கம்பியில் நின்று கொண்டிருந்தார்.

"அந்த மன்னார்சாமிக்கு மரக் கால் இல்லை என்று நாங்கள் சொல்லுகிறோம்! நீ பொய் விளம்பரம் பண்ணி ஊரை ஏமாற்றி விட்டாய்? உண்மையை ஒப்புக் கொள்" என்று உச்ச ஸ்தாயியில் கத்தினன் காலரி ஆசாமி. தங்கள் மனத்திலிருந்த சந்தேகத்தைத் தைரியத்துடன் வெளியிட்டதற்காக எல்லோரும் மனத்துக்குள் அவனைப் பாராட்டினார்கள்.

மானேஜர் மந்தகாசம் செய்தார். "எங்கள் விளம்பரம் நூற்றுக்கு நூறு உண்மை! எங்கள் மன்னார்சாமி மரக்கால் மன்னார்சாமி இல்லை என்று நிரூபிப்பவர்களுக்கு நாங்கள் ஆயிரம் ரூபாய் கொடுக்கத் தயாராயிருக்கிறோம்! நிரூபிப்பீர்களா?" என்றார்.

"முதலில் அந்த ஆசாமிக்கு மரக்கால்தான் என்று நீ நிரூபி ஐயா!" என்று ஆக்ரோஷத்துடன் கத்திக் கொண்டே முன் வந்தார் நாற்காலி ஆசாமி ஒருவர். "ஆமாம்! முழுக் கால் சட்டையைக் கழற்றி விட்டு அவரை வரச் சொல்லு! முழுக் கால்சட்டையை மாட்டிக்கொண்டு வந்து உள்ளே மரக் கால் இருக்கிறது என்றால் எந்த மடையன் ஐயா நம்புவான்?" என்று கர்ஜித்தார் அரை மீசைக்கார ஆசாமி. சர்க்கஸ் கொட்டகையிலிருந்த அனைவருமே தங்கள் ஆசனங்களிலிருந்து எழுந்து நின்று விட்டார்கள்.

சர்க்கஸ் மானேஜர் சட்டென்று பக்கத்திலிருந்த ஒரு ஸ்டூல் மீது ஏறி உயரமாக நின்று கொண்டார். "சபையோர்களே!" என்று அவருடைய கணீரென்ற குரல் கொட்டகையில் நிசப்தத்தை ஏற்படுத்தியது.

"நீங்கள் எல்லோரும் விளம்பரத்தைச் சரியாகக் கவனித்தீர்களல்லவா? மரக்கால் மன்னார்சாமி என்று தானே போட்டிருந்தோம்?" என்றார் கம்பீரமாக.

"ஆமாம்! ஆமாம்!" என்ற ஏகோபித்த குரல்கள் கிளம்பின.

"கால் ஒடிந்த மன்னார்சாமி என்றோ மரத்தினால் செய்த கால் பொருத்தப்பட்ட மன்னார்சாமி என்றோ போட்டிருக்கிறோமா?" என்று அடுத்த கேள்வியைப் போட்டார். வெற்றிகரமாகக் குறுக்கு விசாரணை செய்யும் அட்வகேட்டைப் போல வெற்றிப் புன்னகையுடன் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் திரும்பிப் பார்த்தார்.

சர்க்கஸ் ரசிகர்கள் முகத்தில் சங்கடக் களை பரவியது. மானேஜர் கேள்வியின் நோக்கம் புரியாமல் விழித்தார்கள்.

"மரக்கால் என்றால் என்ன ஐயா அர்த்தம்? நிஜக்கால் என்று அர்த்தமோ?" என்றார் நாற்காலி ஆசாமி, மானேஜரை மடக்கி விட்டது போன்ற தோரணையில்.

"அப்படிக் கேளும்! குன்னக்குடி கோதண்ட ராமன், மதராஸ் மங்களாதேவி என்று நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? அதே மாதிரிதான் இவர் மரக்கால் மன்னார்சாமி! இவர் ஊர் மரக்கால் என்ற கிராமம். ஸ்ரீவைகுண்டம் பக்கத்தில் இருக்கிறது. ஆகையால் இவர் 'மரக்கால் மன்னார்சாமி' இல்லை என்று நீங்கள் நிரூபித்தால் ஆயிரம் ரூபாய் கொடுக்க நான் தயார்!"

மானேஜர் ஸ்டூலிலிருந்து இறங்கினார்! மரக்கால் மன்னார்சாமி ஜம்மென்று கம்பியில் நடக்க ஆரம்பித்தார்! சர்க்கஸ் பாண்டு வாத்தியக் கோஷ்டி காதைப் பிளக்கத் தொடங்கியது. முகத்தில் அசடு வழிய எல்லாரும் தத்தம் ஆசனத்துக்குத் திரும்பினர்.

"மரக் காலு மாக்கு மண்ணாங் கட்டியு மாக்கு!" என்ற மீசைக்காரனின் வார்த்தைகள் காற்றிலே கலந்து மறைந்தது.



நண்பர் :— ரேடியோவின் மூலம் கல்வி அபிவிருத்தி ஏற்படுகிறது என்பதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?

மற்றவர் :—பேஷாக ஒப்புக் கொள்கிறேன். எங்கள் வீட்டில் இருக்கும் ரேடியோவை யாராவது திருப்பினால் உடனே நான் என்னுடைய அறைக்குப் போய்ப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்து விடுவேன்!

"அப்படிக் கேளும்! குன்னக்குடி




"நான் கீல் வாயுவினால் மிகுந்த அவஸ்தைப் பட்டேன் — அதாவது, உடம்பு பூராவும் உள்ள வலியினால் சில சமயங்களில் வேலைக்கும் போக முடியாமலிருந்தது. நண்பன் ஒருவன் "க்ருஷன்" உப்புக்களை உபயோகித்துப் பார்க்குமாறு சிபாரிசு செய்தான். நான் அவ்வாறே செய்ததில், உடம்பு வலிகள் கொஞ்சங் கொஞ்சமாய் மறைந்து வந்தது. வேலைக்கும் யாதொரு தடங்கலின்றிப் போய் வருகிறேன். நான் முற்றிலும் புதிய மனிதனாய் விட்டதற்கு "க்ருஷ"னுக்கு வந்தனம்." —A. R.

விஷத்தன்மை கொண்ட கழிவு பதார்த்தங்கள் சரிவர வெளித்தள்ளப் படாமையால் குடல்களில் தேங்கி, கீல் வாயுவை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னிலுள்ள ஆறுவித முக்கிய உப்புக்கள் குடல்களையும் மூத்திரக் காய்களையும் சரிவர இயங்குமாறு தூண்டுவதால் இவ்விஷப் பொருள்களை சீக்கிரமாகவும் சுலபமாகவும் வெளியே தள்ளுகிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" டீயிலோ, தண்ணீருடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM—1

# வீராசாமியின் வைராக்கியம்

வசு

அன்று மாலை நான் ஆபிஸை விட்டுக் கிளம்பும்போது என் மேஜையின் மேல் இருந்த டெலிபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டேன். 'தொந்தரவு கொடுப்பதற்கு மன்னிக்கவும்' என்று ஆரம்பித்து, 'நாளைக்கு ஒரு ஆளை உங்களிடம் அனுப்புகிறேன். அவனுக்கு ஏதாவது தகுந்த வேலையிருந்தால் அதில் நீங்கள் அவனை அமர்த்தி வையுங்கள். உங்களிடம் வருகிறவன் ஏதோ அவசர புத்தியால் குற்றம் செய்து ஜெயிலுக்குப் போய் விட்டான். விடுதலையாகி இரண்டு நாளாகிறது' என்றார் எங்கள் ஊர் விடுதலை பெற்ற கைதிகள் சகாய சங்கத்தின் அங்கத்தினர் அருணாசலம்.

பதிலுக்கு நான் 'சரி, நாளைக் காலை உங்களிடமிருந்து ஒரு கடிதத்துடன் என்னை வந்து பார்க்கும்படி அந்த நபரிடம் தெரிவித்து விடுங்கள். என்னால் முடிந்ததைச் செய்கிறேன்' என்றேன்.

எங்கள் ஊர் பெண்கள் உயர்தர பாடசாலைக்கு நான் கௌரவ காரியதரிசி. அத்துடன் உள்ளூரிலுள்ள வேறு சில பொது ஸ்தாபனங்களிலும் அங்கம் வைத்துக் கொண்டிருந்தேன். நான் சம்பந்தப் பட்டிருந்த ஸ்தாபனங்களில் காலி விழும் சிற்சில வேலைகளுக்கு அநேகமாக அருணாசலம் மாஜி கைதிகளைத்தான் சிபார்சு செய்து அனுப்புவார். அவர் அனுப்பி வைக்கும் நபர் ஒவ்வொருவனும் அவருடைய பெயருக்கும் நம்பிக்கைக்கும் இழுக்கு வராத வண்ணம் வேலை செய்து வருவதுண்டு. அதே காரணத்தால் கூடிய மட்டும் அருணாசலம் அனுப்பும் ஆட்களைத் தயக்கமின்றி வேலையில் அமர்த்துவது எனக்கு வழக்கம்.

அடுத்த நாள் காலை அருணாசலம் குறிப்பிட்டிருந்த ஆள் அவர் எழுதிக் கொடுத்த கடிதத்துடன் என்னை வந்து பார்த்தான். அவனுக்கு வயது கிட்டத்தட்ட இருபத்து ஐந்திருக்கலாம் என்று மதிப்பிட்டேன். நல்ல கட்டுமஸ்தான தேகம். ஆளைப்பார்த்தால் ஜெயிலுக்குப் போகும்படியான குற்றத்தைச் செய்திருப்பவன் என்று கூடச் சந்தேகிக்க முடியவில்லை. அவனுடைய பேச்சும், அவன் முகபாவமும் அவன் ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று எண்ணும்படி செய்தன என்னை.

அப்பொழுது எங்கள் ஊர் பெண்பாடசாலையில் ஒரு 'அட்டெண்டர்' தேவையாயிருந்தது. அதற்குமுன் வேலைக்கு இருந்தவன் முப்பது வருஷ சர்விசுக்குப் பின் முதிர்ந்த வயது காரணமாக வேலையிலிருந்து விலகி ஒருவாரம் ஆகியிருந்தது. அவனுடைய ஸ்தானத்துக்குத் தகுந்த வேலையாள் ஒருவனை அனுப்பி வைக்கும்படி பள்ளிக்கூடத்துத் தலைமை உபாத்தியாயினிடமிருந்து எனக்கு ஏற்கெனவே இரண்டு கடிதங்கள் வந்திருந்தன. இதை மனத்தில் வைத்துக் கொண்டுதான் அதற்கு முன் தினம் என் நண்பர் அருணாசலத்தினிடம் அவர் கூறிய மாஜி கைதியை அனுப்பும்படி போனில் பதிலளித்தேன்.

வந்தவன் வெளியிட்ட தகவல்களிலிருந்து அவன் பெயர் வீராசாமி யென்றும் அதற்குமுன் அவன் பூஞ்சோலை புரத்தில் ஒரு ஜவுளிக்கடையில் நிலுவை வசூல் செய்யும் வேலையில் இருந்ததாகவும் சுமாராகத் தமிழ் எழுதப் படிக்கத் தெரியுமென்றும் அறிந்து கொண்டேன். அதன்பின் "வீரச்சாமி, இந்த ஊர் பள்ளிக்கூடம் ஒன்றில் 'அட்டெண்டர்' உத்தியோகம் ஒன்று காலியாக இருக்கிறது. மாதச் சம்பளம் இருபத்தைந்து ரூபாய். ஆனால் நல்ல விடுமுறைகள் கிடைக்கும் உனக்குச் சம்மதமானால் சொல்லு. நாளை முதல் வேலையை ஏற்றுக் கொள்ளலாம்" என்றேன்.

"அதுக்கு என்னங்க! இன்னிக்கே வேணுமானாலும் வேலைக்குப் போயிடறேனுங்க" என்றான் அவன் மிகுந்த ஆர்வத்துடன்.

"சரி. அப்படியானால் இன்று சாயங்காலம் என்னை வந்து பார். அந்தப் பள்ளிக்கூடத்து பெரியவாத்தியாரம்மாவுக்கு ஒரு கடிதம் கொடுக்கிறேன். அதை எடுத்துக்கொண்டு போய் நாளைக் காலையில் அவர்களைப் பார்த்தால் உனக்கு வேலை போட்டுக் கொடுத்து விடுவார்கள்" என்றேன்.

இதைக் கேட்டதும் வீராசாமியின் முகபாவம் மாறியது. "என்னங்க, பொம்பிளை பள்ளிக்கூடத்திலேயா வேலை!" என்றான். அவன் குரலில் அவன் மனத்திலுள்ள வெறுப்பு முழுதும் வெளி வந்தது நன்றாகத் தெரிந்தது.

"ஆமாம், அதற்கென்ன!" என்றேன்.

"எஜமான், எனக்கு வேலையில்லாட்டிப் போனாலும் பாதகமில்லீங்க. இந்தப் பொம்பிளைப் பள்ளிக்கூடத்து வேலை மட்டும் வேணாமுங்க!" என்றான் வீராசாமி மறுபடியும்.

"என்ன வீரச்சாமி, உன்னுடைய பேச்சு எனக்குப் புரியவில்லை. உனக்கு முன்னால் அந்தப் பள்ளிக்கூடத்தில் 'அட்டெண்டர்' வேலையில் இருந்தவன் முப்பது வருஷ சர்விஸிலிருந்து நல்ல பெயர் வாங்கிக் கொண்டு போய்விட்டான். சரி, சரி, நீ பிழைக்கத் தெரியாதவன்!" என்றேன் மிகுந்த அலுப்புடன்.

"கோவிச்சுக்கிடாதேயுங்க. நான் அப்படிச் சொல்லுவதற்குக் காரணம் இருக்குங்க. ஒரு பொம்பிளை வார்த்தையை நம்பின முட்டாள் தனத்தினாலேதான் நான் ஜெயிலுக்குப் போக வேண்டியிருந்ததுங்க" என்று தொடர்ந்தான்.

"பூஞ்சோலை புரத்தில் ஜவுளிக் கடையிலே நிலுவை வசூலிக்கும் வேலையிலிருந்த போது அந்த ஊர் பணக்காரர் ஒருவர் வீட்டுக்கு அவர் கடன் பேரில் ஜவுளிக் கடையில் வாங்கின சரக்குக்குப் பணம் வசூல் செய்ய அடிக்கடி போவேனுங்க. அவுங்க வீட்டிலே அஞ்சலைன்னு ஒரு பொண்ணு வேலைக்கு இருந்ததுங்க. அவளும் எங்க குலம்தானுங்க. ஒரு முறைக்கு எனக்குத் தூர உறவுன்னு கூடச் சொல்லலாம். ரொம்ப நாள் பழக்கத்திலே அந்தப் பொண்ணைத் தான் சமயம் சரியா வந்ததும் கலியாணம் கட்டிக் கிடணும்னு நினைச்சிருந்தேன். அவன் வீட்டு எஜமான் ஒரு தடவையாவது நான் போய்க் கேட்டவுடனே பணத்தைக் கொடுக்க மாட்டார். ஏதாவது சால்ஜாப்பு சொல்லி மாதக் கடைசியிலே தான் பணத்தைக் கொடுப்பாருங்க. இருந்தாலும் அவர் ஊருக்குள்ளே ஒரு பெரிய புள்ளின்னு என் முதலாளியும் அவர் கேட்ட போதெல்லாம் கடனுக்குத் துணிமணி முதலியவைகளை அனுப்பி விடுவாருங்க.

"ஒரு மாசம் நான் அந்தப் பெரிய மனிதர் வீட்டுக்குப் போனவுடனேயே அவர் தரவேண்டிய அறுபது ரூபாயையும் எடுத்துக் கொடுத்திட்டாருங்க. எனக்கே ஆச்சரியமாப் போயிட்டதுங்க. நான் அந்தப் பணத்தை வாங்கிக்கிட்டு வரபோது, நான் சொன்னேன் பாருங்க; அவங்க வீட்டிலே வேலைக்கு இருக்கிற பொண்ணு அஞ்சலை, அவளை எதிரிலே கண்டேனுங்க. அவளுடைய எஜமான் பாக்கிப் பணத்தைக் கொடுத்து விட்டதாகச் சொன்னேனுங்க. அவள் சொன்னாள் 'ஆமாம் நீ ஒரு வருசமா சொல்லிக்கிட்டு வாரியே. எனக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கித் தாரேன்னு, அதை இப்போ வாங்கிக் கொடேன். உங்க முதலாளிக்குத்தான் தெரியுமே எங்க எஜமான் தகராறு பிடிச்ச புள்ளின்னு! மாசக் கடைசியில் தான் பணம் அவர் கிட்டேயிருந்து கிடைக்கும்னு. அந்த அறுபது ரூபாயை என் கையிலே கொடு. மாதக் கடைசியில் நான் திருப்பிக் கொடுத்திடறேன். எங்க கிராமத்திலே என் சின்னையா நிலக்கடலை தோண்டி, அதை விற்றுப் பணம் வெச்சிருப்பாரு. அவரு கிட்டேயிருந்து வாங்கிக் கொடுத்திடறேன். என் வார்த்தையை நம்பு!' என்று சொல்லி என்னை ஒரு மாதிரியாப் பார்த்ததுங்க அஞ்சலை.

"பாருங்க, எனக்குப் புத்தி பிசகிப் போச்சுங்க. எப்படியும் மாசக் கடைசி வரைக்கும் முதலாளி, அந்தப் பணக்காரர் தர வேண்டிய பாக்கியைப் பத்தி நினைக்கவே மாட்டாரு என்கிற தைரியத்திலேயே அந்த அறுபது ரூபாயையும் அஞ்சலை கையிலே கொடுத்து விட்டேனுங்க. அவள் அன்றைக்கே கடைக்குப் போய் ஒரு புதுப் புடவை, கைக்கு கில்ட் காப்பு, கொலுசு, சங்கிலி, எல்லாம் வாங்கிக்கிட்டு வந்து விட்டாள்.

"பத்து நாள் கழித்து என்னுடைய முதலாளி என்னைப் பார்த்து 'வீராசாமி, இதுவரை எவ்வளவு நிலுவை வசூல் செய்ய முடிந்தது'ன்னு கேட்டாருங்க. நான் பதில் சொல்லுவதற்குள் அஞ்சலை வேலை செய்துக்கிட்டிருந்த வீட்டு எஜமானர் அங்கே வந்திட்டாருங்க. அவரைக் காட்டி என் முதலாளி, 'இவர் கொடுத்த அறுபது ரூபாய் எங்கே!' என்று கோபமாகக் கேட்ட போது பதறிப் போயிட்டேனுங்க. உண்மையைச் சொல்லத் தைரியம் வல்லீங்க. 'செலவழிச்சிட்டேனுங்க' என்று மட்டும் பதில் சொன்னேன். அன்றைக்கே அவரு என்னைப் போலீசிலே ஒப்படைச்சட்டாருங்க. என் மேலே கேசு நடந்தது. ஆறுமாசம் ஜெயிலுக்குள்ளே தள்ளிப்பிட்டாங்க.



"நான் கோர்ட்டிலே இருக்கும் போது அஞ்சலை என் நிலைமை தெரிந்து பணத்தைக் கொண்டு வந்து கட்டுவாள் என்று எதிர்பார்த்தேனுங்க. அவள் வரவேயில்லை. நான் ஜெயிலுக்குப் போன பிறகாவது என்னை வந்து பார்த்துக் காரணம் சொல்லுவாள் என்று நினைத்தேன். அப்பவும் அவள் என்னை ஏமாற்றி விட்டாள். அப்போதான் ஒரு தீர்மானம் பண்ணிக்கிட்டேனுங்க. உயிர் போனாலும் இந்தப் பொம்பளைங்க முகத்திலே முழிக்கக் கூடாதுன்னு!

"அதனாலே எஜமான், இந்தப் பொம்பிளைப் பள்ளிக் கூடத்திலே எனக்கு வேலை வேண்டாம். நான் பட்டினி கிடந்து செத்தாலும் பரவாயில்லீங்க. வேறு எங்கேயாவது வேலை போட்டுக் கொடுங்க!" என்று அவன் தன் வரலாற்றைக் கூறி முடித்தான்.

அவனுக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கேட்டதும் வீராசாமியின் மேல் எனக்கு அனுதாபம் உண்டாயிற்று. ஆனாலும் அவனுடைய வைராக்கியத்தை எண்ணியபோது, எனக்கு ஒரே ஆச்சரியமா யிருந்தது.

சற்று நேரம் யோசனை செய்து விட்டு "வீராசாமி! இப்போது இந்த வேலைதான் காலியாக இருக்கிறது. நீ போய்விட்டு நாலைந்து நாள் கழித்து வா. அதற்குள் வேறு எங்கேயாவது உனக்கு வேலை கிடைக்குமா என்று விசாரித்துச் சொல்லுகிறேன்" என்று கூறி அவனை அனுப்பினேன்.

"சரி, எஜமான். இந்த ஏழையை நினைவில் வைத்துக்கிடுங்க" என்று கூறி வணக்கம் தெரிவித்துவிட்டுச் சென்றான் வீராசாமி.

## 2

—அடுத்த நாள் மாலை நான் ஆபிஸை விட்டு வந்ததும் என் வீட்டு வாசலில் வீராசாமி காத்துக் கொண்டிருந்தான். "என்ன வீராசாமி, உன்னைக் கொஞ்ச நாள் கழித்து வரச் சொன்னேனே. அதற்குள் வந்துவிட்டாயே!" என்று கேட்டேன்.

வீராசாமி தயங்கிய வண்ணம் "நேற்று இங்கிருந்து போனவுடன் மறுபடியும் எண்ணிப் பார்த்தேனுங்க. நீங்க கொடுக்கிற வேலையையே ஏத்துக்கிடலாம்னு முடிவுக்கு வந்திட்டேனுங்க. நீங்க அந்தப் பள்ளிக்கூடத்துப் பெரிய வாத்தியாரம்மாவுக்கு ஒரு எழுத்துக் கொடுங்க. நான்போய் அவுங்களைப் பார்த்து 'அட்டெண்டர்' வேலையில் சேர்ந்துகிடறேனுங்க" என்றான்.

வீராசாமியின் மனமாற்றம் எனக்கு வியப்பாயிருந்தது. ஒருவேளை அவன் செலவுக்குப் பணமில்லாமல் ஏற்படும் கஷ்டத்தின் காரணமாக அவன் மனதுக்கு இஷ்டமில்லாத போதிலும் அவ்வேலையை ஏற்றுக் கொள்ள முன் வந்திருப்பானோ என்று நினைத்து "வீராசாமி! உனக்கு இப்போது செலவுக்குப் பணமில்லாமலிருந்தால் ஏதோ நான் ஐந்து ரூபாய் கொடுக்கிறேன். நீ வேலையில் அமர்ந்து சம்பளம் வாங்கி அதைத் திருப்பிக்

கொடுத்தால் போதும். உன் மனதிற்குப் பிடிக்காத வேலையில் நீ அவசரமாகச் சேருவதில் எனக்குப் பிரியமில்லை!'' என்றேன்.



வீராசாமி, ''எஜமான், பரவாயில்லீங்க. நீங்க அந்தப் பள்ளிக்கூடத்திலே வேலை போட்டுக் கொடுங்க!'' என்றான் மறுபடியும். அவன் வற்புறுத்தலின் பேரில் பெண் பாடசாலையின் தலைமை உபாத்தியாயினிக்கு வீராசாமியை அட்டெண்டராக நியமிக்கும்படி ஒரு சிபார்சுக் கடிதம் எழுதி அதை அவனிடம் கொடுத்து அனுப்பினேன்.

அடுத்த நாள் காலை பெண்கள் பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியை என்னைத் தேடி வந்தார். ''ஸார், பள்ளிக்கூடத்துக்குப் பாலர் வகுப்புக் குழந்தைகளை அவர்கள் வீட்டிலிருந்து கூட்டிக் கொண்டு வருவதற்காக நியமித்திருக்கும் வேலைக்காரப் பெண் பொன்னியை இன்று காலை எட்டு மணிக்கு அவள் தேரடித் தெரு திருப்பத்தில் போய்க் கொண்டிருக்கும்போது யாரோ ஒருவன் கட்டையால் அவள் மண்டையில் அடித்து விட்டு ஓடி விட்டானும். பெண்ணுக்குத் தலையில் பலத்த காயம். ஆஸ்பத்திரியி லிருக்கிறாள். போலீசுக்கு ஒரு 'கம்பௌண்ட்' உடனடியாக கொடுக்க வேண்டும்!'' என்று சொன்னார்.

உடனே போலீசுக்கு ஒரு மனு எழுதி அனுப்பி விட்டு நானும் ஆசிரியையும் ஆஸ்பத்திரிக்குச் சென்றோம். ஆஸ்பத்திரியில் வார்டில் பெரிய கட்டுடன் படுத்துக் கொண்டிருந்தாள் பொன்னி. அவளுக்கு நினைவு அவ்வளவு தெளிவாக இல்லை. 'உன்னை யார் கட்டையால் தலையில் அடித்தது! அடையாளம் கண்டுபிடிக்க முடியுமா?' என்று டாக்டர் கேட்ட கேள்விக்கு 'முடியும்' என்ற பாவனையாகத் தலையை அசைத்தாள்.

ஆஸ்பத்திரியை விட்டு வெளி வந்ததும் தலைமை ஆசிரியை ''நீங்கள் அனுப்பின வீராசாமி நேற்று என்னை வந்து பார்த்தான். முதல் தேதியிலிருந்து வேலையில் வந்து சேரும்படி ஆர்டர் போட்டு விட்டேன்'' என்று தகவல் தெரிவித்து விட்டு என்னிடம் விடை பெற்றுக்கொண்டார்.

பொன்னி தலையில் அடிபட்ட மூன்றும் நாள் காலை நான் பேப்பர் வாசித்துக் கொண்டிருக்கும்போது ''எஜமான்'' என்றதும் திரும்பிப் பார்த்தேன். வீராசாமிதான் நின்று கொண்டிருந்தான். ''அநியாயமாகப் பெண்கள் பள்ளிக்கூடத்து வேலைக்காரப் பெண் அஞ்சலையை விறகுக் கட்டையால் தலையில் அடித்து விட்டேன். என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பிவிடுங்க. எனக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும்' என்றான்.

''அட பாவி, பள்ளிக்கூடத்தில் வேலை செய்யும் பெண் அஞ்சலையில்லை. அவள் பொன்னி. அடையாளம் தெரியாமல் நிரபராதியான பெண்ணை அடித்துக் கொன்று விட்டாயே'' என்றேன்.

''என்னங்க, அவள் அஞ்சலை இல்லையா! அப்படியானால் நான் கொலைகாரன்தானுங்க. இரண்டு நாளைக்கு முன் உங்ககிட்டே வேலை வேண்டாம்னு போனேன் பாருங்க, அன்றைக்கு சாயங்காலமே அஞ்சலை மாதிரியே ஒரு பெண்ணைப் பார்த்தேனுங்க. அவள் அஞ்சலைதான்னு நினைத்து அவள் எங்கே யெல்லாம் போகிறாள் என்று பார்த்தேனுங்க. அவள் பெரிய வாத்தியாரம்மா வீட்டிலே இருந்து புஸ்தகங்களை எடுத்துக்கிட்டு பள்ளிக்கூடத்திலே நுழைந்து கொண்டிருந்தாள். ஒரு நாளைக்கு அவள் தனியா அகப்பட்டபோது அவள் எனக்குச் செய்த தீமைக்குப் பழிக்குப் பழி வாங்கிவிட வேணும்னு நினைச்சேனுங்க. அதுக்குத் தோதா இருக்கத்தான் அந்தப் பள்ளிக்கூடத்திலேயே வேலை வேணும்னு மறுபடியும் உங்களை வந்து கேட்டேனுங்க. நீங்கள் கொடுத்த எழுத்தைக் கொண்டு போய்ப் பெரிய உபாத்தியாரம்மாகிட்டே கொடுத்ததும் அவுங்க முதல் தேதிக்கு வந்து வேலையை ஒப்புக் கொள்ளச் சொன்னாங்க.

''மூந்தா நாள் காலமே அஞ்சலை மாதிரி இருந்த அந்தப் பெண்ணு தனியாக தேரடித் தெரு திருப்பத்தில் போய்க்கிட்டிருந்ததுங்க. அதுதான் சமயம்னு எண்ணி என் கைக்கு அகப்பட்ட விறகு கட்டையால் அவள் தலையில் பலமாக அடித்து விட்டு ஓடிப் போயிட்டேனுங்க. முன்னால் நான் வேலையாயிருந்த பூஞ்சோலை கிராமத்துக்குப் போய் ஒளிஞ்சிக்கலாம்னு அங்கே போனேனுங்க. அப்போது என்னுடைய பழைய முதலாளி என்னைப் பார்த்து, 'அடே வீராசாமி! அஞ்சலை நாலைந்து நாளைக்கு முந்தி நீ எனக்குக் கொடுக்க வேண்டிய அறுபது ரூபாயைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு அவளாலேதான் உனக்கு இந்தக் கஷ்டம் வந்ததுன்னு சொல்லி அழுதுட்டுப் போச்சு. இனி மேலாவது நீ புத்தியாப் பிழை!' என்றார். அப்போதுதான் எனக்குப் 'பகீர்' என்றதுங்க. அஞ்சலையை ஆத்திரத்தில் அடித்த குற்றத்தை உங்களிடம் வந்து ஒப்புக் கொள்ளணும்னு தோணிச்சுங்க. உடனே புறப்பட்டு வந்துட்டேன். நீங்க சொல்வதைப் பார்த்தால் அஞ்சலைன்னு நினைச்சு வேறு ஒரு பெண்ணைக் காயப்படுத்திட்டேன் போலத் தோணுது. நான் செய்த குற்றத்துக்கு என்னைத் தூக்கில் போட்டாலும் பாவமில்லை!'' என்று கூறிவிட்டு என் பதிலுக்குக் காத்திராமல் போலீஸில் போய்ச் சரணடைந்து விட்டான்.

இதற்கிடையில் ஆஸ்பத்திரியிலிருந்த பொன்னி யின் நிலைமை கவலைக்கிடமா யிருந்து பத்து நாட்கள் கழித்து அவள் ரணம் ஆறி எழுந்து நடமாடும் அளவுக்கு அபிவிருத்தி அடைந்திருந் தது. போலீஸார் வீராசாமியுள்படப் பதினைந்து பேர்களை அவள் முன் ஒன்ருக நிறுத்தி அவளை அடித்தவனை அடையாளம் கண்டு பிடிக்கச் சொன்னர்கள். பொன்னி அவர்களில் ஒருவனைக் கூடத் தான் அதற்கு முன் பார்த்ததில்லை என்று கூறவே, வேறு வழியின்றி வீராசாமியை விடுதலை செய்தனர் போலீஸார்.

இந்தத் தகவல்கள் எல்லாம் எனக்கு எட்டி யதும், என் மனத்தில் பொன்னியும் அஞ்சலையும் ஒருத்திதான் என்ற சந்தேகம் எழுந்தது.

தலையிலிருந்த ரணம் ஆறி ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவந்த மறுநாள் பொன்னி என்னைப் பார்க்க வந்தாள். "பொன்னி, உன்னைப் பற்றிய விவரம் பூராவும் வீராசாமி என்னிடம் சொல்லி யிருக் கிருன். என்னிடத்திலிருந்து உண்மையை நீ மறைக்க முடியாது! உன்னுடைய பெயர் அஞ்சலைதானே!" என்றேன்.

சற்றுத் தயங்கியபின் "ஆமாங்க!" என்ருள்.

"அப்படியானல் பள்ளிக்கூடத்தில் வேலைக்கு வரும்போது உன்பெயர் 'பொன்னி' என்று ஏன் தெரிவித்தாய்!" என்றேன்.

"அஞ்சலைன்னு பேர் வைச்சிருந்த எங்க அத்தை புருசனும் ஜெயிலுக்குப் போனுருங்க. அதே மாதிரி என்னுலேயும் ஒருத்தரு அபியாயமா ஜெயி லுக்குப் போக நேர்ந்ததுங்க. அதனுலே நான் பேரை மாத்திக்கிட்டேனுங்க!" என்ருள்.

"உன்னை விறகுக் கட்டையால் தலையில் அடித் தவன் வீராசாமி தானே" என்று என்னுடைய கடைசிக் கேள்வியையும் கேட்டேன்.

"ஆமாங்க" என்ருள்.

"அப்படியானல் போலீஸில் கேட்டவுடன் ஏன் அதைத் தெரிவிக்கவில்லை!" என்றேன்.

"என்னுலே அவரு ஒரு தடவை ஜெயிலுக்குப் போயாச்சுங்க. நான் உண்மையைச் சொன்னு அவருக்கு மறுபடியும் ஆபத்துன்னு நினைச்சுத்தான் சும்மா இருந்திட்டேனுங்க" என்ருள்.

பொன்னியின் பதிலைக் கேட்டதும் எனக்கு மயிர் கூச்சல் எடுத்தது. அவளுக்கு விடை கொடுத்தனுப்ப நான் நினைத்துக் கொண்டிருக்கும் போது, 'உங்ககிட்டே ஒரு விண்ணப்பமுங்க. அவருக்கும் பள்ளிக்கூடத்து 'அட்டெண்டர்' வேலை கொடுத்ததை எடுத்துவிடக் கூடாதுங்க' என்று கேட்டுக் கொண்டாள்.

"வீராசாமிக்குக் கொடுத்த வேலையில் அவன் இருப்பான்" என்று நான் கூறியதும் எனக்கு நன்றி தெரிவித்து விட்டுச் சென்ருள் பொன்னி.

அன்று மாலை வீராசாமி என்னைப் பார்க்க வந்தான். "எஜமான், நானும் பொன்னியும் நாலுநாள் லீவில் ஊருக்குப் போகிறோம்" என்ருன்.

"திரும்பி வரும்போது..."

"ஆமாங்க, புருசனும் பெண்சாதியுமாகத் தான் திரும்புவோம்" என்று நான் மனதில் நினைத்ததை ஊர்ஜிதம் செய்து விட்டுச் சென்ருன் வீராசாமி. வீராசாமியின் வைராக்கியத்தில் ஏற்பட்ட மாறு தலை எண்ணி உவகை அடைந்தேன்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 23. சந்தேக விளக்கம்

கேள்வி :—எனக்கு முகத்தில் அதிகமாக ரோமம் வளர்கின்றது. அதற்கு என்ன செய்யலாம் ! மஞ்சள் பூசிக் கொள்ளலாமா !

பதில் :—முகத்தில் ரோமம் வளர்வதைத் தடுக்க ஆசனத்தினால் முடியும் என்று சொல்வதற்கில்லை. ஒருகால் குறைவாய் இருந்தால், சிரசாசனத்தினால் வளரலாம். முகத்தில் ரோமம் வளர்ப்பது பிட்யூடரியின் குணமாகும். அதன் வேலையைக் குறைத்துக் கட்டுப்படுத்த முடியாது. ஏன் ! ஆண்களுக்கு முகத்தில் நிறைய ரோமம் வளர்வது ஆண்களுக்கு அழகாயிற்றே ! அதை ஏன் குறைக்க முயற்சிக்க வேண்டும் !

மஞ்சள் பூசுவதால் ரோமத்தைக் குறைக்க முடியும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. மேனி நன்றாய் இருக்கும். பெண்கள் மஞ்சள் பூசுவதால் ரோமம் வளராது. நல்ல களை ஏற்படும் என்று சொல்லுகிறார்கள். இது நமது தன்னாட்டுப் பண்டைய வழக்கம். ஆனால் அதுவும் நிச்சயம் என்று சொல்லுவதற்கில்லை. உலகத்திலுள்ள ஏனைய நாட்டுப் பெண்மணிகள் மஞ்சள் பூசுவதே இல்லை. அதைப் பூசிக் கொள்ளலாம் என்பதையும் அறியார்கள். அதைப் பூசாததினால் அவர்களுக்கு ஆண்களைப் போல முகமெல்லாம் ரோமம் வளர்ந்து விட்டது என்று சொல்வதற்கில்லை. மஞ்சளில் சருமத்தைச் சுத்தமாய் ஆரோக்கியமாய் வைத்துக்கொள்ள வேண்டிய சக்தியிருக்கிறது என்பதென்னவோ வாஸ்தவம். மஞ்சள் இக்காலத்தில் பூசிக் கொள்ளும் வழக்கமும் அநேகமாய்க் குறைந்து வருகிறது. அதை அநாகரிகமாகவும் சிலர் கருதுகின்றனர். பெண்களே இப்படி யென்றால், ஆண்கள் மஞ்சள் பூசினால் எப்படியிருக்கும் ! தேவையானால், இரவில் பூசிக்கொண்டு காலையில் நன்கு அலம்பிவிடலாம். மஞ்சளை அநாகரிகமென்று கருதும் பெண்களும் இரவில் பூசிக்கொண்டு, காலையில் அலம்பி விடலாம். இவ்வாறு செய்தால், ஸ்னோ, க்ரீம், பவுடர் முதலியவைகளில் வனப்புக்காகச் செலவிடும் பணம் மிச்சமாகும். முகமும் தேஜசாய் இருக்கும். ஆனால் ரோமம் வளர்வதைத் தடுக்கும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது.

கேள்வி :—நீங்கள் இதுவரை சொல்லி வந்த ஆசனங்கள் இனி சொல்லப் போகும் ஆசனங்கள் எல்லாவற்றையும் ஒரே நாளில் செய்யவேண்டுமா! அல்லது ஒவ்வொரு நாளில் ஒவ்வொன்றாகச் செய்ய வேண்டுமா !

பதில் :—ஆசனத் திட்டமானது நமது உணவுத் திட்டத்தைப் போன்றது. சாதம், பருப்பு, நெய், துவையல், சாம்பார், ரசம், மோர், கூட்டு, அவியல், பொரியல், கறி, பச்சடி மற்றும் பழவும் நாம் சாப்பிடுவது வழக்கந்தான். இவைகளெல்லாம் ஒரே நாளில் சாப்பிட வேண்டுமா ! அல்லது சாதம் ஒருநாள், பருப்பு ஒருநாள், சாம்பார் ஒருநாள், என்று இப்படித் தனித்தனியாக ஒவ்வொன்றும் சாப்பிடலாமா ! என்று கேட்பது போல் இருக்கிறது இக் கேள்வி. அவரவர்களின் சக்தியை அனுசரித்தும் சௌகரியப்படிக்கும் சாப்பிடலாமல்லவா ! சாதம், சாம்பார், மோர், ஒரு கூட்டு, அல்லது ஒரு கறியுடனும் சாப்பிடலாம். வெறும் சாதம், ரஸம், மோர் சாப்பிடலாம். அல்லது எல்லாமுமேகூடச் சாப்பிடலாம். அதைப் போல அவகாசமும் ஆசையுமிருந்தால் எல்லா ஆசனங்களையும் ஒரே நாளில் செய்யலாம். அவகாசமில்லாதவர்கள், சாதத்துடன், சாம்பார், ஒரு கறி, மோருடன் முடிப்பதுபோல் சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், சாந்தி ஆசனம், நாடிசுத்தி இவைகளை மட்டும் செய்யலாம். ஆனால் வாரத்துக்கு ஒரு நாளாவது நால் வகைக் காய்கறிகளுடன் சாப்பிடுவதைப் போல, விடுமுறை நாளன்றோ, சிறிது அதிகம் அவகாசம் கிடைத்த போதோ எல்லா ஆசனங்களையும் செய்து உடலை நன்கு இளக்கி வைத்துக் கொள்வது நல்லது. இந்தத் திட்டம் சாதாரணமானவர்களுக்குத்தான். நோயாளிகளுக்கு அப்படியல்ல. அவர்களுக்கு வேண்டிய ஆசனங்களை மட்டும் திட்டப்படி செய்தே தீரவேண்டும்.

கேள்வி :—பத்மாசனத்தைப் படிக்கும்போதும், எழுதும்போதும், மற்றும் மேஜை உட்கார்ந்திருக்கும் போதெல்லாம் போடலாம் என்று சொல்லியிருக்கிறீர்கள். அப்படியானால் சாப்பிடும்போது பத்மாசனத்தில் உட்கார்ந்து சாப்பிடலாமா !

பதில் :—சாப்பிடும்போது பத்மாசனத்தில் உட்காரக் கூடாது.

கேள்வி :—பத்மாசனத்துக்கென்று தனியாய் நேரம் வேண்டியதில்லை என்கிறீர்கள். இதற்கு மற்ற ஆசனங்களுக்குள்ளதுபோல் வயிறு காலியாய் இருக்கவேண்டுமென்பதில்லையா !

பதில் :—ஆம், இதற்கென்று தனி நேரம் வேண்டியதில்லை. வயிறு காலியாய் இருக்க வேண்டுமென்ற அவசியமுமில்லை. ஆனால், சாப்பிட்டவுடனேயே பத்மாசனம் போடக் கூடாது. அரை மணி அல்லது ஒரு மணிநேரம் பொறுத்துப் போடலாம். அந்த இடைவேளைக்குள் என்ன முழுகிவிடப் போகிறது !

கேள்வி :—நான் ஒரு முஸ்லிம். "கல்கி"யின் நேயன். தங்கள் ஆரோக்கிய ரகசியக் கட்டுரையைத் தவறாமல் படித்து அதை நடைமுறையில் அனுஷ்டித்து வருகிறேன். ஆனால் இடையில் ஒரு சந்தேகம் வந்துவிட்டது. நாங்கள் ஒரு மாதம் வரை விரதம் அனுஷ்டிப்பது வழக்கம். இரவில் சாப்பிடுவோம். பகலெல்லாம் சாப்பிட மாட்டோம். இந்த விரத நாட்களில் நான் எப்பொழுது ஆசனம் செய்யலாம் என்பதுதான் என் சந்தேகம். ஆசனங்களினால் பல நன்மைகள் அடைந்தவனானதினால் இந்த நாட்களில் ஆசனங்களை நிறுத்தவும் மனம் வரவில்லை.

பதில் :—விரத நாட்களில் ஆசனம் செய்வதை நிறுத்த வேண்டிய அவசியமில்லை. இரவு நேரங்களில் சாப்பிடுவதினால் காலை நேரத்தில் ஆகாரம் வயிற்றில் இருக்கலாம். ஆகையால் காலையில் செய்வது அவ்வளவு சரியல்ல. மாலையில் செய்ய

லாம். அல்லது சாப்பிட்டு ஆறு அல்லது ஏழு மணி நேரம் ஆகிவிட்டிருந்தால் காலையிலும் செய்யலாம். பகல் நேரத்தில் எந்த காரணத்தைக் கொண்டும் ஆசனங்களைச் செய்யக் கூடாது. காலை, மாலை, வெய்யிலின் உக்கிரம் இல்லாத நேரங்கள்தான் தேகப் பயிற்சிக்கு ஏற்றது. நீங்கள் இவ்வளவு அக்கறையுடன் கேள்வியைக் கேட்டுத் தெரிந்து கொள்ள முயற்சித்ததற்காக மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். உங்கள் ஊக்கம் வளர்வதாக. இன்னும் ஆசனங்களைச் செய்யச் செய்யத்தான் அதனுடைய அபரிமிதமான பலன் தெரியும்.

**கேள்வி:**—இன்னின்ன நோய்க்கு, இன்னின்ன ஆசனங்களைத்தான் செய்ய வேண்டுமென்ற கட்டாயம் உண்டா? அல்லது எல்லா ஆசனங்களையுமே செய்யலாமா?

**பதில்:**—ஆம்; சில நோய்களுக்குச் சில ஆசனங்களைத்தான் செய்ய வேண்டியிருக்கும். சில ஆசனங்கள் செய்யக் கூடாததாயுமிருக்கும். எந்த ஆசனம் செய்யலாம், எந்த ஆசனம் செய்யக் கூடாது என்பதை நன்கு தெரிந்து கொண்டுதான் செய்ய வேண்டும். அல்லது யோகாசன ஆசிரியர்களின் ஆலோசனைப்படி செய்யலாம்.

**கேள்வி:**—ஆசனங்களைச் செய்வதால் வெளிச்சதை வனப்புப் பெறுமா?

**பதில்:**—ஆசனங்களைச் செய்வதால் வெளிச்சதை வனப்பு பெறாது. ஆனால் உள் அவயவங்கள் வனப்புப் பெறும். அதனால் நீடித்த நாள் நோய் இல்லாமல் வாழலாம்; ஆரோக்கியமாயிருக்கலாம். வெளிச் சதை வனப்புக்கு வேறு பயிற்சிகள்தான் சிறந்தது. ஆனால் அப்பயிற்சிகளினால் ஏற்பட்ட வனப்பை நிரந்தரமாய்க் காப்பாற்ற வேண்டுமானால் ஆசனமும் செய்ய வேண்டும். ஆனால், இரண்டையும் ஒரே நேரத்தில் கலந்து செய்யக் கூடாது. ஆசனத்தைக் காலையிலும், மற்ற பயிற்சிகளை மாலையிலும் செய்யலாம். அல்லது மற்ற பயிற்சிகளைக் காலையிலும், ஆசனங்களை மாலையிலும் செய்யலாம். இன்னும் பல விவரங்களைப் பற்றி இதற்கு முன் பல தடவைகளில் விவரித்துக் கூறியிருக்கிறேன்.

**கேள்வி:**—பிரம்மச்சரியத்தைக் காப்பாற்ற ஆசனங்கள் உதவுமா? அவை எந்த ஆசனங்கள்?

**பதில்:**—பிரம்மச்சர்யத்தைக் காப்பாற்ற ஆசனங்கள் உதவுவதைப் போல வேறெதுவும் உதவாது. ஆசனம் பிரம்மசர்யத்திற்கு ஒரு பாதுகாப்பான கவசம் போன்றவை. பிரம்மச்சர்யத்தைக் காப்பாற்ற மிகத் திடமான மனம் தேவை. சஞ்சல மனமுடையவர்கள் பிரம்மச்சர்யம் அனுஷ்டிக்க முடியாது. சஞ்சல மனதை விலக்கி, திடமான—ஸ்திரமான மனதை அளிப்பது ஆசனப் பயிற்சியாகும். இந்திரியங்களை நம் இஷ்டப்படி கட்டி ஆளும் சக்தியை அளிப்பது இந்த யோகமார்க்கமேயாகும். அதற்குச் சிரசாசனம், மற்றும் எல்லா ஆசனங்களுமே ஏற்றது. என்றாலும் சர்வாங்காசனம், சிரசாசனம், அர்த்த மத்ஸ்யேந்திரா, உட்டியாண, நௌளி, நௌலிகிரியா, சாந்தியாசனம், பிராணயாமம் முதலியன மிக முக்கியமானவை.

**கேள்வி:**—சர்வாங்காசனத்தை எல்லா ரோகிகளுமே செய்யலாமா?

**பதில்:**—செய்யலாம். ஆனால் நோயின் தன்மையைப் பொறுத்தும், நோயாளிகளைப் பொறுத்தும் நேரத்தை அதிகரிக்கவோ, குறைக்கவோ வேண்டியிருக்கும். மிகப் பலவீனமானவர்கள், படுத்த படுக்கையாய் இருப்பவர்கள், ஆசன ஆசிரியர்களின் ஆலோசனைப்படி செய்வது நல்லது. மற்றவர்கள் சர்வாங்காசனத்துடன், மற்றும் சில ஆசனங்களையும் செய்ய வேண்டியிருக்கும். இவைகள் அந்தந்த நோயைப் பொறுத்தது.

**கேள்வி:**—எலும்புக்குச் சக்தியுண்டாக எந்த ஆசனம் சிறந்தது?

**பதில்:**—சிரசாசனம்தான் சிறந்தது. எலும்புகளை வளர்க்கவும், உறுதியாக்கவும், பிட்யூடரியின் ஹார்மோன் மிக அவசியம். அதைச் சிரசாசனத்தில் பெறலாம். அத்துடன்கூட கால்ஷியம்—சுண்ணாம்புச் சத்தை நாம் சாப்பிடும் உணவில் அழிந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எந்தக் காய்கறி கீரைகளையும் நறுக்கிய பின் கழுவாமலும், வென்னீரைக் கொட்டாமலும் சிறு அளவில் அளவுடன் வேக வைத்தால் கால்ஷியம் அதாவது சுண்ணாம்புச் சத்தை இழக்காமல் பாதுகாக்கலாம்.

**கேள்வி:**—குளிர்ப் பிரதேசமாகிய உதகமண்டலம், கோடைக்கானல் போன்ற இடங்களில் வெறும் அரைக்கால் சட்டையுடன் ஆசனம் செய்ய முடியவில்லை; குளிர்கிறது. பாடியுடன் கம்பளி பனியன் போட்டுக் கொள்ளலாமா?

**பதில்:**—பேஷாகப் போட்டுக் கொள்ளலாம். முழு கால் சட்டையும் போட்டுக் கொண்டு செய்யலாம். மெதுவாய் உடலை அதிகமாய் நெருக்காத உடையாய் இருக்க வேண்டும். (தொடரும்)



*ராயல சீமைப் பஞ்ச நிவாரண நிதிக்காக, பம்பாயில் கலாநிலைய நடிகர்கள் நாரதர் ஸ்ரீநிவாஸ ராவின் 'சரளா' நாடகத்தை நடித்து, முழுசாக இரண்டாயிர ரூபாய் கொடுத்தார்கள். அந் நாடகத்தில் வரும் இரு சகோதரர்களும் குழந்தை தம்பதி சகிதமாகக் காட்சியளிக்கின்றனர்.*




# பாதி விலை

ஸ்விட்ஜர்லாந்திலிருந்து ஏராளமாகத் தருவிக்கப்பட்ட கடிகாரங்களில் பாதிக்குமேல் விற்பனையாகி விட்டன. இப் பாதி விலை சலுகை இன்னும் இரண்டு வாரங்களுக்கு மேல் நீடிக்கப்பட மாட்டாது. ஒவ்வொரு 15, 17 ஜுவல் கடிகாரமும் 3 வருஷமும் மற்றவை ஒரு வருஷமும் உத்தரவாதம் கொண்டவை. ஒவ்வொரு கடிகாரத்துடனும், ஒரு காரண்டி சர்டிபிகேட்டும், ஒரு நேர்த்தியான ஸ்ட்ராப், ஒரு வெல்வெட் பெட்டியும் இனாமாகக் கொடுக்கப்படும். பாக்கிங், விற்பனை வரி, தபாற் செலவு இலவசம். ஆர்டர்கள் வி. பி. பி. மூலம் அனுப்பப்படும்.

**இலவசம்** புது வருஷ காலண்டரும், மடக்கக் கூடிய சீப்பும் இணைக்கப்பட்ட தையல் இல்லாத அமெரிக்கன் பிளாஸ்டிக் மணிபர்ஸ் ஒன்றும் ஒவ்வொரு கடிகாரத்துடனும் இலவசமாக அனுப்பப்படும்

குறைந்த விலைகளின் விவரம் கீழ்க்காணுமாறு:



வாடர் ப்ரூப், ரேடியம் சைஸ் 10½

நெ. ரூ.
1 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 49/-
2 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 51/-
15 க்ரோம் ஸ்டீல் பேக் 17 ஜுவல்ஸ் 59/-
16 ரோ.கோ.ஸ்டீல்பேக் 17 ஜுவல்ஸ் 61/-



சிறிய ரவுண்டு சைஸ் 9½

நெ. ரூ.
21 பிளேட் க்ரோம் கேஸ் 4 ஜுவல்ஸ் 22/-
22 பிளேட் க்ரோம் கேஸ் 7 ஜுவல்ஸ் 29/-
3 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
4 ரோ.கோ.ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



சென்டர் செகன்ட் சைஸ் 9½

23 பிளேட் க்ரோம் கேஸ் 7 ஜுவல்ஸ் 30/-
5 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
6 ரோ.கோ.ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



வளைவு சைஸ் 7½

24 ரோ.கோ.ஸ்டீல்பேக் 5 ஜுவல்ஸ் 30/-
7 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
8 ரோ.கோ.ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



டன்னோ சைஸ் 6½

9 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
10 ரோ.கோ.ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



லேடீஸ் சைஸ் 5½

11 ரோ.கோ. ஸ்டீல்பேக், ஸில்க் ஸ்ட்ராப், பேன்ஸி டயல் 15 ஜுவல்ஸ் 50/-



லேடீஸ் சைஸ் 5½

25 ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் ஸில்க் கார்டுடன் 15 ஜுவல்ஸ் 50/-



ரவுண்டு சைஸ் 8½

26 பிளேட் க்ரோம் கேஸ், லேடி பிரின்ட் ரேடியம் டயல் 22/-

**PEARL WATCH CO., FORJETT STREET, BOMBAY-26**

# அதிர்ஷ்டம் யாருக்கு?

டி. ஜி. எஸ்.

ராகவன் தன் மனைவி சாந்தாவுக்குத் தெரியாமல் அவள் பெயருக்கு நாலணா கொடுத்து ஒரு லாட்டரிச் சீட்டு வாங்கி யிருந்தான். தன் அதிர்ஷ்டத்தில் என்றுமே நம்பிக்கை யில்லாத அவன் தனக்குப் பரிசு வருமென்று எதிர்பார்க்கவே யில்லை. ஆகவே முதற் பரிசு நூறு ரூபாய் அவன் வாங்கிய சீட்டுக்குத்தான் விழுந்திருக்கிறது என்று தெரிந்ததும் அவன் பிரமித்து விட்டான்.

பரிசுப் பணம் நூறு ரூபாய் ஒரு முழு நோட்டாக மறுநாளே அவன் கைக்குக் கிட்டிற்று. அதன் ஸ்பரிசத்தில் உள்ளங் குளிர்ந்த ராகவன் அப் பணத்தைச் செலவழிப்பதற் குப் பல திட்டங்கள் போட்டான்.

அவன் மனைவி நீண்ட நாட்களாகவே ஒரு சில்க் புடவை வாங்க வேண்டுமென்று நச் சரித்துக் கொண்டிருந்தாள். அதை வாங்க லாமா அல்லது தனக்கு ஒரு 'ரிஸ்ட் வாட்ச்' வாங்கிக் கொள்ளலாமா என்று சிந்தனை செய்தான். அவன் மனசு தீர்மானமாக ஒரு முடிவுக்கும் வரவில்லை.

அன்று மாலை வீடு திரும்பிய ராகவன் அவளுக்கு 'அதிர்ஷ்டம்' அடித்த விவரத்தை மனைவியிடம் வெளியிடவே யில்லை. அந்தப் பணத்தை அன்றே அவள் கரியாக்கி விடு வாள் என்பதுதான் அதற்குக் காரணம்.

அன்று இரவு அவன் மனைவி அடுக்களையில் காரியமாக இருந்தபோது அவளுக்குத் தெரி யாமல் பெட்டியிலிருந்த பழைய காப்பி கலர் கோட்டை எடுத்து அதன் உள் பையிலே அந்த நீல நிற நூறு ரூபாய் நோட்டைப் பத்திரப்படுத்தி வைத்த பின்னர்தான் அவ னுக்கு மூச்சு வந்தது.

அன்றிரவெல்லாம் அவன் தூங்கவே யில்லை. அதற்கடுத்தநாள் ஆபீஸிலும் அவன் சிந்தனை அந்த நூறு ரூபாயைப் பற்றியதாய்த் தானிருந்தது. கடைசியில் மனைவிக்குச் சில்க் புடவை வாங்கித் தருவதை விட தனக்கு 'ரிஸ்ட் வாட்ச்' வாங்கிக் கொள்வதுதான் உத்தமம் என்ற முடிவுக்கு வந்தான்.

சீக்கிரமே தன் மணிக்கட்டை அலங்கரிக்கப் போகும் 'ரிஸ்ட் வாட்சை'க் கற்பனைக் கண்ணால் கண்டு ஆனந்தித்தபடியே வீடு திரும்பிய ராகவனை இன்முகத்துடன் வர வேற்றாள் சாந்தா.

வழக்கமாக அவன் வீடு திரும்பும்போதெல் லாம் சிடு சிடுவென்றிருக்கும் அவள் அன்று இன்முகத்துடனிருந்தது ஏற்கெனவே குதூ கலத்திலிருந்த அவன் உள்ளத்தை மேலும் குதூகலிக்கச் செய்தது.

அவன் ஈஸிசேரில் அமர்ந்ததும், "இருங் கள்; காப்பி கொண்டு வருகிறேன்" என்று சொல்லி உள்ளே போன சாந்தா சில நிமிடம் பொறுத்துப் புதிய 'எவர் ஸில்வர்' டம்ளர் ஒன்றில் காப்பியுடன் திரும்பினாள். அவ ளுடைய இன்னொரு கரத்தில் அதேபோல் புதிய 'டபரா' ஒன்றிருந்தது.

"ஏது இவைகள்?" என்று கேட்டான் ராகவன் ஆச்சரியத்துடன்.

"இன்றுதான் பழைய துணிமணிகள் வாங்குபவனிடம் பெட்டியிலிருந்த உங்கள் பழைய கோட்டைப் போட்டு வாங்கினேன். முதலில் அந்தக் கிழிந்த கோட்டுக்கு ஒன்றுமே கொடுக்க முடியாதென்று சொன் னான். அப்புறம் இப்படியும், அப்படியும் திருப்பிப் பார்த்துவிட்டு டம்ளர் மட்டும் கொடுப்பதாய்ச் சொன்னான். நான்தான் விடாப்பிடியாக நின்று இந்த டபராவையும் வாங்கினேன். எப்படி என் சாமர்த்தியம்?" என்று புன்னகையுடன் கேட்டாள் அவள்.

ராகவன் தலையில் சம்மட்டியால் ஓங்கி அடித்தாற் போலிருந்தது. இருந்தாலும் ஒரு அசட்டு நம்பிக்கையுடன் "பெட்டியிலிருந் ததே அந்த காப்பி கலர் கோட்டு! அதையா கொடுத்து விட்டாய்?" என்று கேட்டான்.

"ஆமாம்; அதையேதான்! ஏன் இப்படி விழிக்கிறீர்கள்? என்னவாயிற்று?" என்று பர பரப்புடன் கேட்டாள் சாந்தா.

ராகவன் ஒன்றும் பதில் பேசவில்லை!

---

## அரங்கேற்றம்

சென்ற மாத ஆரம்பத்தில் சென்னை ஸ்ரீ பார்த்தசாரதி சபையின் ஆதரவில் ஹிந்து ஹைஸ்கூலில் கிருஷ்ண – மகேஷ் ஆகிய இரு சிறுவர்களின் மிருதங்க அரங் கேற்றம் நடைபெற்றது. வித்வான் எம். ஏ. கல்யாணகிருஷ்ண பாகவதரின் பாட்டுக் குச் சிறுவர்கள் மிருதங்கம் வாசித்தனர். மேற்படி விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ டி. ஆர். சீனிவாச அய்யங்கார் அவர்கள் சிறுவர்களையும் அவர்களுடைய குருவான மைலாட்டூர் ஸ்ரீ சாமி அய்யர் அவர்களை யும் மிகவும் பாராட்டினர்.





மூதன் முதலில் செக்கடித் தெருவில் குடியிருந்தேன். என்ன செய்வது! ஊரில் குடியிருக்க வேறு வசதியான இடம் கிடையாது. நான் குடியிருந்த வீட்டிற்கு மேல்புறத்தில் ஒரு செக்கு; கீழ்ப் புறத்தில் ஒரு செக்கு. ஒவ்வொரு நாளும் எண்ணெய் யாடுவதற்காக விடியற்காலத்தில் செக்கைப் பூட்டி விட்டார்களானால் செக்கிழுக்கும் மாடுகளுக்குச் சாயந்திரம் இருள் நெருங்கும் நேரம் வரையில் வேலை இருந்து கொண்டிருக்கும். செக்காடும் போது ஏற்படும் சத்தத்தை எப்படி என்று வர்ணிப்பது! என்னைப்போல் அந்த நாத வெள்ளத்தில் மூழ்கி அனுபவித்தவர்களுக்குத்தான் அந்த அருமை தெரியும். இரண்டு செக்குகள் மேல் ஸ்தாயும் கீழ் ஸ்தாயுமாய்ப் போட்டி போட்டுக் கொண்டு எழுப்பும் அந்த நாதானந்தத்தை நான் அதிக நாள் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. புதுப்பாளையத் தெருவில் ஒரு நல்ல வீடு மலிவான வாடகைக்குக் கிடைத்ததால் அங்கு குடியேறினேன். புதுப்பாளையத் தெருவில் நான் குடியிருந்த வீட்டுக்கு இடது புறம் ஒரு நெல் மிஷின்; வலது புறம் ஒரு உலைக்கூடம். நாள் பூராவும் உலைக்கூடத்திலிருந்து எழும் செம்மட்டி அடியும் நெல் மிஷினின் 'தட தடா' சத்தமும் வீட்டையே அதிர வைத்துக் கொண்டிருந்தது. என்றோ ஒரு நாள் நான் குடியிருந்த கட்டடமே இந்த அதிர்ச்சியினால் இடிந்து விழுந்து விடக் கூடும் என்று தோன்றியதால் பழைய பாளையத் தெருவிலுள்ள ஒரு வீட்டுக்கு மிகவும் சிரமப் பட்டு வந்து சேர்ந்தேன்.

நான் அந்த வீட்டுக்குக் குடி வந்த இரண்டு நாட்களுக்குள் நான் முன்பு குடியிருந்த இரண்டு இடங்களையும் விட அது மிகவும் அபாயகரமான இடம் என்று தெரிந்துகொண்டேன். நான் குடியிருந்த அந்த வீட்டிற்கு மேல் வீட்டில் ஒரு பிடில் வித்வானும் கீழ் வீட்டில் ஒரு பிடில் வித்வானும் குடி யிருந்தார்கள். ஒரு மனுஷனுக்கு இதை விட வேறு என்ன ஆபத்து வேண்டும்!

என் வீட்டிற்குக் கீழ்ப் புறம் இருந்த பிடில் வித்வானின் பெயர் ஜிங்கிரி புங்கிரி ஜல்பேசய்யர். மேல்புறம் இருந்த பிடில் வித்வானின் பெயர் மகா ரோதனம் மாதவ ராவ். இந்த இருவரும் பிடில் வாசிக்கும் நேரம் தவிர மற்ற நேரங்களில் சுபாவத்தில் மிகவும் நல்லவர்கள்தான். பாவம் செய்த மனிதர்களை நரகத்தில் ரம்பம் வைத்து அறுப்பார்கள் என்பார்கள் அல்லவா! அதைப்போலத்தான் இந்த இரண்டு வித்வான்களும் பிடில் வாசிக்கும்போது எனக்கு வேதனை ஏற்படும்.

ஜிங்கிரி புங்கிரி ஜல்பேசன் பகலில் பிடில் சாதகம் செய்வார். மகாரோதனம் மாதவ ராவ் இரவு முழுவதும் பிடில் சாதகம் செய்வார். இந்த இருவரும் ஒரேவேளையில் சேர்ந்தாற்போல் தங்கள் சாதகத்தை வைத்துக்கொண்டு என் மீது கொஞ்சம் கிருபை புரியக் கூடாதா!

ஒரு நாள் மாதவ ராவை அழைத்து மிகவும் தாழ்மையுடன் வேண்டிக் கொண்டேன்: "ஏன் அண்ணா நீங்கள் பகல் வேளையிலேயே பிடில் வாசிப்பதை வைத்துக் கொண்டால் என்ன!"

"ஏன், உங்களுக்கு அது இடையூறாக இருக்கிறதா!" என்றார்.

அவரிடம் பளிச்சென்று, "ஆமாம், இடையூறாகத்தா னிருக்கிறது" என்று சொல்லக்கூடிய துணிச்சல் அப்பொழுது எனக்கு இல்லை. "இல்லை, ...சங்கீத மென்றும் எனக்கு அலாதி மோகம். அதற்காக நான் தூக்கத்தைக்கூட லட்சியம் செய்வதில்லை. ஆனால் ஒவ்வொரு நாளும் சங்கீதத்துக்காகத் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டால் உடம்புக்கு ஆகாதே..." என்றேன்.

"நீங்கள் ராத்திரி கண் விழித்துக் கொண்டு நான் பிடில் வாசிப்பதைக் கேட்பதில் எனக்கு ரொம்பத் திருப்தி. ராத்திரி கண் விழிப்பதற்காகப் பகலில் கொஞ்சம் தூங்கி விடுங்கள். உடம்புக்கு ஒருவிதமான கெடுதலும் வராது" என்றார்.

"பகலில் தூங்கலாம்...ஆனால் பகல் முழுவதும் தான் பக்கத்து வீட்டிலிருக்கும் ஜிங்கிரி புங்கிரி பிடில் வாசித்து நிம்மதி இல்லாமல் செய்கிறாரே!"

"அந்த வேதனையைச் சொல்லுங்கோ...மகா பாவி. இவனுக எல்லாம் பிடிலைத் தூக்கிக் கொண்டு நானும் வாசிக்கிறேன் என்று வந்துடறான் பாருங்கோ...கொலைகாரன்கள். உங்களுக்காக வேண்டுமானால் நான் பகலில் பிடில் வாசிக்கலாம். ஆனால் வீட்டுக் குழந்தைகளின் தொந்தரவு தாங்க முடியவில்லை. அதற்காகத்தான் இரவில் அவைகள் தூங்கின பிறகு வைத்துக் கொள்கிறேன்......"

"நான் அதிகம் உங்களுக்குச் சொல்ல வேண்டுமா! அப்புறம் உங்கள் தயவு..." என்று சொல்லி அவரை அனுப்பிவிட்டேன். ஆனால் மாதவராவுக்கு என்மீதோ, பிடில் மீதோ, சங்கீதத்தின் மீதோ துளிக்கூட தயவு பிறக்கவே யில்லை. இரவு வேளைகளில் பிடில் வாசித்து என் நித்திரையைப் பாழாக்கிக் கொண்டுதான் இருந்தார்.

மகாரோதனம் யாதவராவ்தான் என் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. ஜிங்கிரி புங்கிரி நல் பேசனுவது இணங்கி வருவாரோ என்று நினைத்து அவரைக் கூப்பிட்டு, "அண்ணா, நீங்கள் பிடில் வாசிப்பது மிகவும் நன்ருய் இருக்கிறது. ஆனால் நீங்கள் பகலில் வாசிப்பதை இரவில் ஊரடங்கிய பிறகு வாசித்தால் நன்றாயிருக்கும். பகல் வேளையில் இருக்கும் அமளியில் என்னைப்போல் பக்கத்து வீட்டிலிருக்கும் சங்கீதப் பித்தனுக்கு உங்களுடைய அபூர்வமான வாசிப்பைக் கேட்டு ரசிக்க பாக்கியமில்லாமல் போய் விடுகிறது. தவிர ராத்திரி யெல்லாம் கண் விழிப்பதால் பகலில் தூங்கத்தான் பொழுது சரியாய் இருக்கிறது......"

"ஏன் உங்களுக்கு ராத்திரி யெல்லாம் தூக்கமில்லை...அது ஏதாவது ஒரு வியாதியோ......!"

"எனக்கு ஒரு வியாதியுமில்லை. பக்கத்து வீட்டிலே மகாரோதனம் இருக்கார் பாருங்கோ... அவர் ராத்திரியிலேதான் பிடில் சாதகத்தை வைத்துக் கொள்கிறார்...என்ன செய்வது!"

"கொலைகாரன், மகாபாவி. இதை நீங்க எப்படி சகிச்சிண்டிருக்கீங்க! பிடில்லே விரல் வைக்க யோக்யதை இல்லாதவ னெல்லாம் ஊரிலே பேர் சொல்லிக் கொண்டு கிளம்பிடறானுங்க, பாவம். ராத்திரி வேளையிலே கண் விழித்துக் கண் விழித்து, உங்க கண்ணே இடுங்கிப் போச்சு. உடம்பே இளைச்சுப் போச்சு..." என்று உடம்பைப் பார்த்து உருகிப் போனார் ஜிங்கிரி புங்கிரி.

"என்ன செய்வது! அதற்காகத்தான் அவரையும் உங்களைப் போல் பகல் வேளையில் பிடில் வாசிக்கும்படி கேட்டுக் கொண்டால் ஒருவேளையாவது நிம்மதியாக இருக்கலாமே என்று கேட்டுக் கொண்டேன். பகலில் அவர் வீட்டில் குழந்தைகள் தொந்தரவு செய்கிறதாம். அவரால் பிடில் வாசிக்க முடிகிறதில்லையாம். நீங்களாவது இரவில் பிடில் வாசிப்பது என்று வைத்துக் கொண்டால்......"

"அவன் வீட்டில்தான் குழந்தைகள் இருக்கா! என் வீட்டில் குழந்தைகள் இல்லையா! ஹூம் ஹூம் முடியாது, அது முடியாது. இரவில் நான் பிடில் வாசிப்பது என்று வைத்துக் கொண்டால் என் குழந்தைகள் தூங்கவே தூங்காது. தவிர நான் இரவில் பிடில் வாசிக்க ஆரம்பித்தால் பகலில் பகிரங்கமாகப் பிடில் வாசிக்கப் பயப்படுகிறான் என்று ஊரில் நாலு பேர் சொல்லுவா...ஆகையினாலே அது முடியாது..." என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார் ஜிங்கிரி புங்கிரி.

அதற்குமேல் நான் என்ன செய்ய முடியும்! உலகத்தில் ஒவ்வொரு மனிதர்களுக்கும் ஒவ்வொரு விதமான கஷ்டங்கள். அதையெல்லாம் விதி என்பார்கள். அதைப்போல் இரண்டு பிடில் வித்வான்களுக் கிடையே நான் அகப்பட்டுக் கொண்டு அவஸ்தைப் படுவதை விதி என்று தான் நினைத்துக் கொண்டேன். ஆனால் விதி என்று சொல்லிக் கஷ்டத்தை அனுபவிக்க மனது இடங் கொடுக்கவில்லை. இந்த விதியையும் மதியால் வென்றுவிட முயற்சி செய்தேன்.

* * *

எனக்குச் சங்கீதத்தில் கொஞ்சம் பிரியம் உண்டு. சுபாவத்திலேயே கொஞ்சம் பாடுவேன். மனிதர்களோடு பிறந்த வெறி சில உண்டல்லவா! அதைப் போலத்தான் சங்கீதமும் எனக்கு. நான் பாடுகிற ராகங்கள் என்ன! அவைகள் எதிலிருந்து ஜன்யம், எத்தனுவது மேளகர்த்தா என்றெல்லாம் முடியாது. அவைக ளெல்லாம் கடவுளைப்போல் தாமே பிறந்தவைகள். இதைப்போலத் தான் ஸ்வரம் தாளம், எல்லாம் ஒரு க்ரமத்திலும் அடங்காத சங்கீதம். அதாவது அக்கிரம சங்கீதம். என்னுடைய அக்கிரம சங்கீதத்தை வெளியே கொண்டுவரப் பிடில் போன்ற உப சாதனங்களே எனக்கு வேண்டாம். பகவான் கொடுத்த சரீரம் இருக்கிறது. விடாப்பிடியாகப் பாடக் கூடிய பலமும் திறமையும் இருக்கிறது. அப்புறம் கேட்பானேன். இத்தனை நாளாக நான் பாடினால் என் மனைவி பிறந்த வீட்டுக்குப் போய் விடுவதாகப் பயமுறுத்திக் கொண்டிருந்தாள். அதனால் என்னுடைய சங்கீத வெறியை அடக்கிக் கொண்டிருந்தேன். இப்பொழுது பக்கத்து வீடுகளிலுள்ள பிடில்காரர்களின் தொல்லை தாங்காமல் இரவு பகல் என்று பாராமல் என்னைச் சங்கீதம் பாட அனுமதித்தாள்.

ஒருநாள், இரண்டு நாள், மூன்று நாள். சர்வ சுதந்திரமாக எவரையும் லட்சியம் செய்யாமல் பாடினேன். தொண்டை புண்ணாகக் கத்தினேன்; குடல் தெறிக்கப் பாடினேன். என்ன செய்தாலென்ன! பக்கத்து வீடுகளிலுள்ள பிடில் வித்வான்கள் அசைந்து கொடுப்பதாகவே தெரியவில்லை. ஆனால் நான் என் முயற்சியைக் கைவிடுவதாய் இல்லை. அவர்கள் பக்கத்து வீடுகளைக்



தெருவில் நடப்பவர் (கோபத்துடன்):— ஏன் ஐயா, உமக்குக் கார் ஓட்டுவதைப் பற்றி ஒன்றுமே தெரியாதோ? ஆள் மேலே ஏற்ற வருகிறீரே?

கார் டிரைவர்:—உமக்குத்தான் ரோட்டில் பார்த்து நடக்கத் தெரியவில்லை. கார் ஓட்டுவதைப் பற்றி எனக்குத் தெரிந்ததை எழுதினால் ஒரு புஸ்தகமே எழுதலாமே!

தெருவில் நடப்பவர்:—ஆமாம், உமக்குத் தெரியாததைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தால் ஒரு ஆஸ்பத்திரியே நிரம்பிவிடும்!

காரி செய்யும் வரையில் விடாமல் சங்கீதாப்பியாஸம் செய்வது என்று நிர்மானித்து விட்டேன்.

ஒரு நாள் காலை வேளை. ஜிங்கிரி புங்கிரி பிடிலை எடுத்து வாசிக்கத் தொடங்கினார். நானும் சாரீரத்தை வசதி செய்து கொண்டு பாட ஆரம்பித்தேன். பக்கத்து வீட்டிலிருந்து வரும் பிடில் சப்தத்தைக் காதில் வாங்காமலேயே கண்களை மூடிக் கொண்டு பாடிக்கொண்டிருந்தேன்.

'சார்' என்று ஒரு குரல் கேட்டது. பாடுவதை நிறுத்தி கண்ணை விழித்துப் பார்த்தேன். எதிரே ஜிங்கிரி புங்கிரி நின்று கொண்டிருந்தார்.

''அடடே! வாங்கோ...எனக்கே ஒரு வெறி உண்டு. அது வந்தால் பாட ஆரம்பிச்சுடுவேன். என் பாட்டு உங்கள் வாசிப்புக்கு இடைஞ்சலாக இருக்கும்......மன்னித்துக் கொள்ள வேணும்...'' என்றேன்.

'' இடைஞ்சலா! அதெல்லாம் இல்லேண்ணா! நீங்க ரொம்ப அபூர்வமாப் பாடுகிறீர்கள். உங்களிடம் இவ்வளவு விஷயம் இருக்கிறது எனக்குத் தெரியாமல் போச்சே! அடாடா! இந்த மாதிரி இந்தக் காலத்திலே உழைச்சுப் பாடறவா யார் இருக்கா! உங்க பாட்டைக் கேட்டா புலி வேட்டை சிங்கமய்யங்கார் ஞாபகம்தான் எனக்கு வருகிறது. அதே பாணி, அதே போக்கு, அடாடா!...'' என்று சொல்லி உட்கார்ந்தார்.

ஜிங்கிரி புங்கிரி என் பாட்டை இவ்வளவு உயர்வாகக் கூறுவார் என்று நான் நினைக்கவே இல்லை. அவருடைய வார்த்தை என்னைத் திகைக்க வைத்தது. என் திகைப்பை அடக்கிக் கொண்டு ''என்னமோ, அண்ணா! என் பாட்டெல்லாம் ஒரு வித்வான் கிட்டே பாடம் கேட்டதினாலோ கேள்வி ஞானத்தாலோ ஏற்பட்டதல்ல. எல்லாம் தானாகவே ஏற்பட்ட விஷயங்கள்...'' என்றேன்.

''அப்படியா...அதுதான் நீங்க பாடும் போதே தெரியறதே! அதுதான் உண்மையான சங்கீதம். தானாக வருகிறதுதான் உயர்வான சங்கீதம். உங்க பாட்டு எந்த வகையிலும் பிடிபடாத போதே தெரிந்து கொண்டு விட்டேன்'' என்றார்.

''நீங்க இவ்வளவு சிலாக்கியமா என் பாட்டைச் சொல்லுவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை...''

''நல்ல வித்வத்து எங்காவது இருந்தால் அதை என்னால் புகழாமல் இருக்க முடியாது. அதிருக்கட்டும். நீங்க ஏன் இங்கே தனியாகப் பாடிக் கொண்டிருக்கணும்! எங்க வீட்டுக்கு வந்து பாடுங்கோ. நானும் பிடில் வாசிக்கிறேன். எனக்கும் ஒரு நல்ல பாட்டுக்கு வாசித்துச் சாதகம் செய்து கொண்டாற் போலிருக்கும்'' என்றார்.

கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதையாய் சேருமென்று நான் நினைக்கவே இல்லை. என்னுடைய பாட்டு என்னை இவ்வளவு பெரிய ஆபத்தில் கொண்டு போய்ச் சிக்க வைக்குமென்று நான் நினைக்கவே யில்லை. என்னால் கூடுமானவரையில் ஜிங்கிரி புங்கிரியிடமிருந்து தப்பிக்கப் பார்த்தேன். அந்த மனிதர் பிடிவாதமாக என்னைத் தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார். நான் பாடினேன்; அவர் பிடில் வாசித்தார். நான் என்ன பாடினேன் என்று எனக்குத் தெரியாது. அவர் எப்படி பிடில் வாசித்தார் என்றும் எனக்குத் தெரியாது. அது அவருடைய சாமர்த்தியம் தானே! - அன்று பகல் முழுவதும் என்னைப் பாட வைத்துப் பாதிப் பிராணனை வாங்கி விட்டார் மனிதர். அன்றோடு அவர் என்னை விட்டு விட்டால் நல்லதென்று பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

இரவு எட்டு மணி இருக்கும். ''அண்ணா'' என்ற குரல் கேட்டது. வயிற்றில் நெருப்பை வைத்தது போலிருந்தது. மெதுவாக வெளியே எட்டிப் பார்த்தேன். பிடில் வித்வான் மகா ரோதனம் மாதவ ராவ் நின்று கொண்டிருந்தார். ''வாங்கோ! என்ன சமாசாரம்!'' என்றேன்.

''ஒன்றுமில்லை. இன்று மத்தியான மெல்லாம் ஜிங்கிரி புங்கிரி வீட்டிலே போய்ப் பாடிக் கொண்டிருந்தாற்போல் இருக்கு...'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தார்.

''ஆமாம். என்னமோ தமாஷாக...அவரும் பிடில் வாசித்தார்...'' என்றேன்.

''அது தெரிஞ்சுதானே கேட்கிறேன். ஆனால் உங்க பாட்டிற்குப் பிடில் வாசிக்கிற யோக்யதை அவனுக்கு உண்டா!''

''என் பாட்டுக்குப் பிடில் வாசிக்க உலகத்தில் ஒருவருக்குமே யோக்யதை இல்லையென்று எனக்குத் தெரியும். இருந்தாலும், கூப்பிட்டார். தட்ட முடியவில்லை...நீங்க புலிவேட்டை சிங்கமய்யங்கார் மாதிரி பாடுகிறீர்கள் என்று எல்லாம் புகழ்ச்சியாகச் சொன்னார்...'' என்றேன்.

''புலி வேட்டை சிங்கமய்யங்காரை இவன் ரொம்பக் கண்டானோ! உங்க பாட்டு அசல் உறுமல் வீர பைரவய்யர் சாயலாக அல்லவா இருக்கு! அதெல்லாம் என்னைப் போல அனுபவப்பட்ட பிடில் வித்வானுக்குத் தான் தெரியும். நீங்க வாங்கோ என் வீட்டுக்கு; உங்க பாட்டிற்கு நான் பிடில் வாசிக்கிறேன் பாருங்கோ......'' என்று துணிகரமாக என் கையைப் பிடித்து இழுத்தார். அவர் பிடியிலிருந்து விலகுவது அசாத்யமென்று பட்டது. குற்றவாளிபோல் அவரைப் பின் தொடர்ந்தேன்.

இரவு முழுவதும் பாடினேன். மகாரோதனம் பிடில் வாசித்தார். மறுநாள் காலையில் எப்படியாவது இந்த இரண்டு பேர்களிடமிருந்தும் தப்பித்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம்தான் ஏற்பட்டது. உடம்பெல்லாம் வலித்தது. தொண்டை வலியால் பேச முடியவில்லை. பகல் வேளையில் பிராணனை வாங்க ஜிங்கிரி புங்கிரி வந்துவிடப் போகிறாரே என்ற பீதியில் விடியற் காலையிலேயே வீட்டை விட்டுக் கிளம்பி விட்டேன். இரண்டு மூன்று நாள் வரையில் பகல் வேளையில் ஜிங்கிரி புங்கிரிக்குப் பயந்து கொண்டும், இரவு வேளையில் மகா ரோதனத்திற்குப் பயந்து கொண்டும் நான் வீட்டு வழியே வராமலிருந்தேன். இந்த இரண்டு பிடில் வித்வான்களிடமிருந்தும் விடுதலையடைந்து உயிர் வாழ வேண்டுமென்றால்,—இந்த விதியை மதியால் வெல்ல வேண்டுமென்றால்—உடனேயே வேறு வீடு பார்த்துக் குடிபோவதுதான் புத்திசாலித்தனமாகப் பட்டது.

வீட்டைத் தேடி ஒவ்வொரு தெருவாக அலைந்தேன். ஒரு தெருவிலும் இடம் கிடைக்கவில்லை. கடைசியில் நான் முதன்முதலில் குடியிருந்த செக்கடித் தெருவிலுள்ள வீடே காலியாக இருந்தது. வாடகையில் இரண்டு ரூபாய் குறைத்துக் கொள்வதாக வீட்டுக்காரர் சொன்னார். எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே இல்லை. அந்த வீட்டிற்கே மறுபடியும் குடிவந்து விட்டேன். என் மனசு 'விடுதலை, விடுதலை' என்று பாடியது. ஆம்! மனசுதான் பாடியது. என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும், உலக க்ஷேமத்தை முன்னிட்டும் நான் வாய் திறந்து பாடுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டேன்.

**Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras**

# ஹிமாலயா புக்கே

டாய்லட், டால்கம் பௌடர்களின்

இனிமையான நறுமணத்தை

நீங்களும் விரும்புவீர்கள்




இரண்டு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்புகள்

HBP. 5-X30 TM

REGD. No. M 4392
*Registered as a newspaper in Ceylon*